# மகாத்மாவின் மணிவாசகம்

[காந்தியடிகளின் 'மாணவருக்கு' என்ற
நூலின் முதல் பத்து அதிகாரங்கள்]

புதுமைப் பதிப்பகம்

---

கிடைக்குமிடம்:

நவயுகப் பிரசுராலயம், காரைக்குடி.

# பெண்களுக்கு

[காந்தியடிகள் எழுதியதும் பேசியதும்]

தொகுத்தவர்

ஸ்ரீ ஆனந்த். டி. ஹிங்கோரானி

மொழி பெயர்த்தோர்

ஸ்ரீ. வெ. ராமசாமி—ஸ்ரீ. அ. லெ. நடராஜன்

வெளியிட்டோர்

புதுமைப் பதிப்பகம், காரைக்குடி.

மகாத்மாவின் படம் முகப்பில்
ஒளிருகிறது

கதர் பைண்டு கண்கவர் வனப்பு

விலை ரூபாய் ஆறு

விற்பனை உரிமையாளர் :

நவயுகப் பிரசுராலயம்

கல்லுக்கட்டி :: காரைக்குடி

1097

# மாணவரொருவர் கேட்ட நான்கு கேள்விகள்

## கலை

"உண்மையான கலை செய்யவேண்டிய காரியமாவது, ஆன்மா தனது அந்தராத்மாவை உணரச்செய்வதே யாகும்...ஆன்மாவுக்கு எங்கெல்லாமோ பறக்க வேண்டுமென்கிற ஆசை யுண்டு. இதற்குத் தடையாயிருப்பதெதுவும் வெறும் மயக்கமாகும்; மாயவலையாகும்."

'தில்குஷ்' என்னும் இடத்தில் காந்திஜி தவமிருந்து இறைவழிபாடு செய்து கொண்டிருந்தார். அப்போது அவரைப் பார்ப்பதற்காக அனேகர் அங்கு வந்து போனார்கள். அவர்களில் சாந்திநிகேதனத்திலிருந்து வந்த ராமச்சந்திரன் என்னும் இளமாணவரும் ஒருவர். இவர், ஸி. எப். ஆண்ட்ரூஸின் மாணவர். சிறிது காலம் டெல்லியில் தங்கிவர விரும்புவதாக ராமச்சந்திரன் ஆசிரியரிடத்தில் தெரிவித்தார். ஆண்ட்ரூஸும் அதற்கு இசைந்தார். டெல்லியை விட்டுப் புறப்பட்ட தினத்தன்று மாலையில், ஆண்ட்ரூஸ், ராமச்சந்திரனை காந்திஜி இருந்த மேல் மாடிக்கு அழைத்துச் சென்றார். "ராமச்சந்திரனை நான் இதுவரையில் தங்களுக்கு அறிமுகம் செய்துவைக்காமல் இருந்துவிட்டேன். இவ்வளவு நாளும் நம்மோடிருந்து அவர் நமக்கு உதவி செய்து வந்திருக்கிறார். அவருக்கு தங்களிடம் சில கேள்விகள் கேட்க விருப்பம். சாந்திநிகேதனத்திற்குப் போவதற்காக அவர் இங்கிருந்து நாளை புறப்படுகிறார். அதற்குள்ளேயே தாங்கள் அவருடன் பேச இசைந்தால் நலமாயிருக்கும்" என்று அவர் காந்திஜியிடம் சொன்னார், மறுநாள், திங்கட்கிழமை; காந்திஜி

மௌனவிரதம் அனுஷ்டிக்கிற தினம்; ஆகவே, ராமச்சந்திரன் ஒரு நாள் அதிகமாகத் தங்கியிருந்து, செவ்வாய்க்கிழமை காலை ரெயிலில்தான் கல்கத்தா வுக்குப் பிரயாணமானார். காலை வழிபாடு முடிந்ததும், சரியாக ஐந்தரைமணிக்கு காந்திஜி ராமச்சந்திரனைக் கூப்பிட்டனுப்பினர். தம் மனத்தை உறுத்திக்கொண் டிருந்த சங்கடங்களையும் சந்தேகங்களையும் ராமச்சந்திரன் ஒரு காகிதத்தில் குறித்துக்கொண்டார். ஆயினும், தாம் கேட்க விரும்பிய கேள்விகள் அனைத்தையும் கேட்டுவிட முடியுமென்ற நம்பிக்கை அவருக்கு முதலில் இல்லை. போதிய அளவு தைரியப் படுத்திக்கொண்டு, காந்திஜியை வந்து பார்த்தார். அவருடைய படிப்பு, சொந்த ஊர் முதலிய வற்றைப்பற்றி காந்திஜி மெல்ல விசாரிக்கத் தொடங்கிய தும், அவருக்கிருந்த தயக்கமும் கூச்சமும் ஒரே விநாடியில் நீங்கி விட்டன. அன்று காலையில் காந்திஜியுடன் ராமச்சந்திரன் பேசிக் கொண்டிருந்தவற்றை யெல்லாம் அப்படியே எழுதுவது சாத்தியமல்ல. அவற்றின் சாராம்சத்தை மட்டுமே இங்கு சொல்லமுடியும்.

"தாங்கள் போட்டிருக்கும் தேசீயப் புனருத்தாரண திட்டத்தில், உணர்ந்தோ உணராமலோ, கலை சம்பந்த மான விஷயங்களைத் தாங்கள் ஒதுக்கி வைத்திருப்பதாகப் பலர் கருதுகிறார்கள்; இவர்கள் தங்களைப் பாராட்டுபவர் கள் தான்; அன்றியும், பெரியவர்கள்; அறிவாளிகள். இவர்கள் இப்படிக் கருதுவது சரிதானா?" என்று ராமச் சந்திரன் பேச்சை ஆரம்பித்தார்.

"நான் பல விஷயங்களைப்பற்றி பேச நேரிடும்போது ஏதாவது ஒரு விஷயத்தில் நின்று அதை மட்டும் அழுத்திச் சொல்வது வழக்கம். கலை விஷயமாக நான் சொல்வதைப் பெரும்பாலோர் தவருக எண்ணியிருப்ப தைக்கண்டு நான் வருந்துகிறேன்" என்று காந்திஜி விடை

யளித்தார். "எல்லாப் பொருள்களுக்குமே, அகத்தோற்றம் புறத்தோற்றம் என இரு தோற்றங்கள் இருக்கின்றன. அகத்தோற்றத்தை உணர்ந்து கொள்ள உதவி செய்கிற வரைக்குந்தான் புறத்தோற்றத்துக்கு பொருள் உண்டு. உண்மையான கலைகள் யாவும் உள்ளத்து உணர்ச்சிகளை வெளியிட வந்த கருவிகள் தான். மனிதனுடைய அக வுணர்ச்சியை விளங்கச் செய்கிற அளவைப் பொறுத்தே கலைகளின் புறத்தோற்றங்களுக்கு மதிப்பு உண்டு."

"கலைஞனது உள்ளத்திலே எழுகிற மன எழுச்சி கள் சொற்களாகவும் வருணங்களாகவும் உருவங்களாக வும் பரிணமித்து, கவிதை என்றும், ஓவியம் என்றும், சிற்பம் என்றும், பெயர் பெறுவதாகச் சிறந்த கலைஞர்கள் சொல்லியிருக்கிறார்களே" என்று தயக்கத் தோடு ராமச்சந்திரன் சொன்னார்.

"ஆம், அப்படிப்பட்ட இயல்பமைந்த கலைகளிடத்து எனக்கு ஆர்வம் அதிகம்" என்று காந்திஜி ஒப்புக்கொண் டார். "ஆனால், அனேகர், தங்களைப் பெரிய கலைஞர் களாகக் கருதிக் கொள்ளுகிறார்கள். அவர்களைக் கலைஞர்க ளெனவே பொதுமக்களும் மதிக்கிறார்கள். ஆயினும், அவர்கள் இயற்றியிருக்கும் நூல் அல்லது சித்திரம் முதலி யவற்றில் ஒன்றிற்கூட உள்ளத்தின் ஆவேசம் ஒரு சிறிதும் காணவில்லை!"

"இதற்கு உதாரணமாக யாராவது ஒருவரைத் தாங்கள் எடுத்துச் சொல்ல முடியுமா?"

"ஆஸ்கார் ஒயில்டு என்ற ஆசிரியரை அப்படிச்சொல்ல லாம். நான் இங்கிலாந்தில் இருந்தபோது அவரைப்பற்றிய பேச்சு அதிகமாக இருந்தது. ஆகவே, அவரைப்பற்றி நான் பேசமுடியும்" என்று காந்திஜி சொன்னார்.

"இக்காலத்துச் சிறந்த இலக்கிய ஆசிரியர்களில் ஆஸ்கார் ஒயில்டும் ஒருவர் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்று ராமச்சந்திரன் குறிப்பிட்டார்.

"இது எனக்கு உடன்பாடல்ல. உயர்ந்த கலையை ஆஸ்கார் ஒயில்டு புறவடிவில் மட்டுமே கண்டிருக்கிறார். இதனாலேயே அவர், ஒழுங்கீனத்தைக்கூட அழகுபடுத்திக் காட்டி, அதிலே வெற்றியும் பெற்றுவிட்டார். உண்மையான கலை செய்யவேண்டிய காரியமாவது, ஆன்மா தனது அந்தராத்மாவை உணரச் செய்வதேயாகும். என்னைப் பொறுத்தவரையில், ஆன்ம நிலையை உணர்வதற்குப் புறத்தோற்றங்கள் எனக்கு அவசியமானவை அல்ல என்றே கருதுகிறேன். கலைத்திறன் அமைந்த பொருளென்று நீங்கள் கருதுகிற பொருள்களை என்னைச்சுற்றிக் காணமுடியாது. ஆயினும், போதிய கலைப்பண்பு என் வாழ்க்கையில் அமைந்திருப்பதாக நான் நிச்சயமாய்ச் சொல்லமுடியும். நான் வசிக்கிற அறையின் சுவர்கள் அழகின்றி வெறிச்சென்றிருக்கலாம்; முகட்டில் கூரை கூட இல்லாதிருக்கலாம். இவற்றால் எனது வாழ்க்கையின் கலைப்பண்பு குறைந்துபோய் விடாது. கூரையில்லாத வீட்டிலிருந்தால், பார்க்கப் பார்க்க முடிவில்லாமல் எங்குமே பரந்து மீன்பூத்திருக்கும் வானத்தின் அழகை நான் பார்த்து அனுபவிக்க முடிகிறது. மேலேயுள்ள வானத்தையும் அதிலே ஒளிவிடும் எண்ணற்ற நட்சத்திரங்களையும் நான் நோக்கும்போது, என் கண்முன்னே எத்தனையோ காட்சிகள் மாறி மாறித் தோன்றுகின்றன. எந்தக் கலைஞனுக்காவது இவற்றைச் சிருஷ்டிக்கும் ஆற்றல் உண்டா? இப்படி நான் சொல்லுவதனால், கலைப்பண்பமைந்த பொருள்களின் அருமையை நான் அங்கீகரிக்கவில்லை என்று எண்ணிவிடக்கூடாது. இயற்கையில் சாசுவதமாக அமைந்துள்ள அழகைப் பார்த்துப் பார்த்து அனுபவித்துக்கொண்டே இருக்கலாம். மனிதனால்

சமைக்கப்பட்ட எந்தக் கலையும் இதை ஒவ்வாது என்று நான் கருதுகிறேன். மனிதன் சிருஷ்டித்த கலையானது, ஆன்மா தன்னை உணருவதற்கு எவ்வளவுதூரம் உதவி செய்கிறதோ அவ்வளவுக்கே அதை நாம் மதிக்கவேண்டும்."

"கலைஞர்கள், புறத்தே தோன்றும் அழகைக் கொண்டே உண்மையைக் காண்பதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அந்த வழியில் உண்மையைக் காண்பது சாத்தியமா ?" என்று ராமச்சந்திரன் கேட்டார்.

"இந்த முறையை நான் மாற்றிச் சொல்வேன். உண்மைக் குள்ளேயே அழகைக் காண்கிறேன். உண்மை மூலமாகவும் அழகைக் காண்கிறேன்" என்று காந்திஜி சொன்னார். "உண்மையான கருத்துக்களில் மிக்க அழகு இருக்கிறது. அப்படியே உண்மை உணர்ச்சி நிறைந்த முகம், பாட்டு, ஓவியம் ஆகியவற்றிலும் மிக்க அழகு இருக்கிறது. சாதாரணமாக, மக்கள் உண்மைவெளியீட் டில் அழகைக் கண்டு அனுபவிக்கிறதில்லை ; கண் இருந்தும் குருடர்களாகத்தான் அவர்கள் விளங்குகிறார்கள். மக்கள் உண்மை பாவத்தில் அழகைக் காணும்போது தான் கலை என்பது தோன்றுகிற தென்னலாம்."

"அப்படியானால், உண்மையைவிட்டு அழகும், அழகை விட்டு உண்மையும், தனித்தனியாக இருக்க முடியாதா ?" என்றார் ராமச்சந்திரன்.

"அழகு என்றால் என்ன வென்பதை நாம் முதலில் திட்டமாய்த் தெரிந்துகொள்ள வேண்டும்" என்றார் காந்திஜி. "சாதாரண ஜனங்கள் இந்தச் சொல் லுக்கு என்ன பொருளைக் கொண்டிருக்கிறார்களோ அதே பொருளை நாமும் கொள்வோமாயின், அழகும் உண்மை யும் வெவ்வேறானவை என்றுதான் ஏற்படும். பார்வைக்கு

மட்டும் அழகான ஒரு பெண்ணைப் பார்த்து அழகுடைய வள் என்று சொல்ல முடியுமா ?''

சிந்தித்துப் பார்க்காமலே, '' ஆம், முடியும் '' என்றார் ராமச்சந்திரன்.

"ஒரு பெண் ஒழுக்கந் தவறியவளாக இருந்தாலும், அதைக் கவனியாது, புறத்தோற்றத்தை மட்டும் கொண்டு, அவளை அழகுடையவள் என்று நீங்கள் சொல்வீர்களா ? ''

ராமச்சந்திரன் சற்றுத் தயங்கி, பிறகு சொன்னார்: "அப்படி இருப்பவளுடைய முகம் அழகுடையதா யிராது. அகத்தின் அழகையே முகம் எடுத்துக் காட்டுகிறது. உண்மைக் கலைஞர்கள் தங்கள் நுண்ணறிவினாலே அகத்தின் அழகைக் கண்டுபிடித்து, அதைத் தக்கபடி வெளியிடவும் செய்வார்கள்.''

"இப்போது நீங்கள் சொன்னதையேதான் நானும் இவ்வளவு நேரமாகச் சொல்லிக்கொண் டிருக்கிறேன். புறத்தோற்றத்தினால் மட்டும் ஒரு பொருளுக்கு அழகு அமைய முடியாது என்பதை இப்போது நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்கள் அல்லவா ? புறத்தோற்றம் எவ்வண்ண மிருந்த போதிலும், உள்ளத்திலிருந்து உண்மைஒளி வீசு கின்ற முகமே அழகுடன் இருப்பதாக உண்மைக் கலைஞனுக்குத் தென்படும். எனவே, உண்மை யில்லாமல் அழகு என்பது இல்லை. அதுமட்டு மல்ல ; வெளிப் பார்வைக்குச் சிறிதும் அழகாயிராத உருவங்களிலும் உண்மைத் தத்துவம் காட்சி அளிக்கக் கூடும். சாக்ரடீஸ் என்னும் பெரியாரை நாம் அறிவோம். அவர் காலத்திலே கிரேக்க நாட்டில் அவரைவிட அவலட்சணமானவர் வேறெவருமே கிடையாதாம். ஆனால், அவருடைய வாழ்க்கையானது உண்மையையே நாடிக்கொண் டிருந்ததாகச் சொல்லு

கிறார்கள். அவலட்சணமானவராக இருந்த போதிலும், சாக்ரடீஸ் உண்மையை நாடித் தம் வாழ்க்கையை நடத்திய படியால், அவரை நான் அழகுள்ளவராகவே கருதுகிறேன். பிடியஸ் என்ற சிற்பி புறத்தோற்றத்தின் அழகைக் கண்டு அனுபவிக்கும் இயல்புடையவர். ஆனாலும், சாக்ரடீஸிடம் காணப்பட்ட உண்மையின் பொலிவைக் கண்டு அனுபவிப்பதற்கு, விகாரமான புறத்தோற்றம் பிடியஸிற்குத் தடையாக இருந்ததில்லை."

"நீங்கள் சொல்வது உண்மையானால், அழகற்ற கேவல மான வாழ்க்கை நடத்திய மனிதர் சிலர் அரிய கலைப் பண்புடைய பொருள்களைச் சிருஷ்டித் திருப்பதைக் காண்கிறோமே, இது எவ்வாறு சாத்தியமாகும்?" என்று ராமச்சந்திரன் கேட்டார்.

"உண்மையும் பொய்யும், நன்மையும் தீமையும், வாழ்க்கையில் கலந்தே இருக்கின்றன என்பதை இது புலப்படுத்துகிறது. கலைஞனுடைய வாழ்க்கையிலும் இது உண்மையே. கலைஞனுக்கு உண்மையான திருஷ்டி ஏற் படுகிறபோது, சிறந்த அழகுபெற்ற கலைகள் பிறக்கும். இப்படி வருகிற உணர்ச்சி கலைஞனுடைய வாழ்க்கையில் அடிக்கடி ஏற்படுவதில்லை; குறைவாகவே தோன்றும். அதனாலேதான், உயர்ந்த கலைகளும் குறைவாக இருக் கின்றன."

இதை ராமச்சந்திரன் புரிந்துகொள்ளாது கஷ்டப் பட்டார். 'எது உண்மைத்தத்துவம் அமைந்திருக்கிறதோ அல்லது எது நன்மையுடையதா யிருக்கிறதோ அது மட்டுமே அழகா யிருக்குமானால், ஒழுக்கத்திற்கு அப்பாற் பட்ட பொருள்கள் அழகா யிருக்க நியாயமில்லையே' என்று ராமச்சந்திரன் தமக்குள்ளேயே சிறிது இரைந்து சொல் லிக் கொண்டார். பிறகு, "ஒழுக்கம் ஒழுங்கீனம் இரண் டிற்குமே புறம்பான பொருள்கள் பல அழகா யிருக்கின்

றன. உதாரணமாக, சூரியன் மறைவதும் இரவிலே நட்சத்திரங்கள் சூழப் பிறைச் சந்திரன் தோன்றுவதும் அழகாய் இருப்பதைக் காண்கிறோம். இவற்றில் உண்மைத் தத்துவம் அமைந்திருக்கிறதா ?" என்று கேட்டார்.

"ஆம். இவற்றின் அழகிலே உண்மைத் தத்துவம் இருக்கிறதென்றே சொல்ல வேண்டும். இறைவன் ஒருவன் இருக்கிறான் என்ற உண்மையை இவற்றின் மூலமாக நாம் அறிய முடிகிற தல்லவா ? படைப்புக் கெல்லாம் அடிப் படையாக விளங்கும் இந்த உண்மை, இவற்றில் அமைந் திருக்கிறபடியினாலே, இவை அழகுடன் மிளிர்கின்றன. சூரியாஸ்தமனத்தின் அதிசயத்தையோ சந்திரனின் அழ கையோ கண்டு நான் அடையும் வியப்புக் கொஞ்சமல்ல. அப்போது, எனது ஆன்மா, யாவற்றையும் படைத்த இறைவனை எண்ணித் தலைவணங்குகிறது. இந்தப் படைப் புக்கள் யாவற்றிலும், இறைவனையும் அவனுடைய கருணை யையுமே நான் காண முயலுகிறேன். இறைவனைக் காணச் சூரியாஸ்தமனமும் சூரியோதயமும் துணைசெய்யா விட்டால், வெறுந் தடைகளென்றே அவற்றை நான் கருது வேன். ஆன்மாவுக்கு எங்கெல்லாமோ பறக்க வேண்டு மென்கிற ஆசையுண்டு. இதற்குத் தடையாக யிருப்ப தெதுவும் வெறும் மயக்கமாகும்; மாயவலையாகும். ஏன், நமது உடம்புகூட முத்தியடையும் மார்க்கத்துக்குப் பல வகையில் தடையா யிருக்கவில்லையா ? இது போலத்தான்."

"கலையைப் பற்றித் தங்களுடைய கருத்துக்களைத் தெரிவித்ததற்காக நான் தங்களுக்கு நன்றி பாராட்டு கிறேன். அவை எனக்கு விளங்குகின்றன. அவற்றை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். தாங்கள் அவற்றை எழுதி வெளிப்படுத்தினால், இளைஞர்கள் சரியான நெறி யிலே செல்வதற்கு அவை வழிகாட்டியாக இருக்கும்" என்று ராமச்சந்திரன் சொன்னார்.

காந்திஜி சிரித்துக்கொண்டே சொன்னர்: "அப்படிச் செய்ய எனக்கு ஒருபோதும் எண்ணமில்லை. கலை சம்பந்தமாக நான் ஏதேனும் செய்ய முயல்வது அடாத செயலாகும். மேற்கூறியவைகளே கலையைப்பற்றிய எனது அடிப்படையான அபிப்பிராயம். இருந்தபோதிலும், கலையை ஆராய்ந்து வருபவன் அல்ல நான். எனக்கு ஆற்றல் எவ்வளவுதான் இருக்கிறதென்பதை நான் அறிவேன். கலையைப்பற்றி நான் பேசாமலும் எழுதாமலும் இருப்பதற்குக் காரணம் இதுவே யாகும். எல்லாவற்றையும் நான் அறிந்துவிடவில்லை. இந்த உணர்ச்சி யொன்றே எனக்கு மனோபலத்தைத் தருவதா யிருக்கிறது. என்னுடைய வாழ்க்கையில் ஏதோ சில காரியங்களை நான் சாதிக்க முடிந்ததென்று சொன்னல், மற்றெதையும்விட இந்த உணர்ச்சிதான் முக்கியமான உதவியாக இருந்திருக்கிறது. எனது வேலை கலைஞனுடைய வேலை அல்ல, வேறானது. என்னுடைய லட்சியத்தை விட்டுவிலகி, கலைஞனுடைய வேலையைச் செய்ய நான் ஆசைப்படுவது அவ்வளவு சரியன்று."

## II

## இயந்திரங்கள்

> "இயந்திரங்களின் உதவியால், கோடிக்கணக்கான மக்களை இன்று ஒருசிலரே ஏவி அதிகாரம் செலுத்திக்கொண்டிருக்கிறர்கள். இயந்திரம் வைத்து நடத்துவதன் காரணம், மனிதர் படுகிற சிரமத்தைக் குறைக்கவேண்டுமென்ற பரோபகாரச் சிந்தையல்ல; பேராசைதான். இந்த அக்கிரமமான அமைப்புமுறை சரியல்ல; இதை ஒழித்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் என் முழு பலத்தையும் கொண்டு இயந்திரத்தோடு போராடி வருகிறேன்."

அடுத்தபடியாக, ராமச்சந்திரன், "பாபுஜி, தாங்கள் இயந்திரம் என்னும் பெயரால் வழங்கிவருவது எதுவுமே கூடாதென்கிறீர்களா?" என்று கேட்டார்.

ராமச்சந்திரன் கேட்ட இந்தக் கேள்விக்கு, காந்திஜி சொன்ன பதில்: "நமது உடம்பே ஒரு நுட்பமான இயந்திரம்; நாம் சுற்றிக்கொண்டிருக்கும் ராட்டினமும்

ஒரு இயந்திரம்தான். அப்படி இருக்கும்போது, இயந்திரங்கள் யாவற்றையுமே வேண்டாமென்று நான் சொல்லுகிறேன் என்பது எப்படிப் பொருந்தும்? இயந்திரம் என்பதற்காகவே இயந்திரத்தை நான் வெறுக்கவில்லை. அவற்றின்மீது மக்கள் கொண்டுள்ள மோகத்தையே நான் கண்டிக்கிறேன். மக்கள் படுகிற சிரமத்தைக் குறைப்பதாகச் சொல்கிற இயந்திரங்களிலே மக்களுக்கு மோகமிருக்கிறது. இது பைத்தியக்காரத்தனமான மோகம். இயந்திரங்களின் உதவியினல் உடல் உழைப்புக் குறைந்துவிடலாம்; ஆனல், ஆயிரக்கணக்கானபேர் வேலைசெய்து கூலிபெற வழியில்லாமற் போகிறதே! வீடுவாசலின்றி, பசியாலும் பட்டினியாலும் மக்கள் மடிந்துபோகிறார்களே! இயந்திரங்கள் காரணமாக, உடல் உழைப்புக் குறைந்துபோகிறதென்றும், நேரம் மீதப்பட்டு ஓய்வு ஏற்படுகிறதென்றும் சொல்லுகிறார்கள். இவ் வசதிகளை ஒருசிலர் மட்டும் அனுபவித்தால் போதாது; மனித சமுதாயத்திலுள்ளோர் அனைவருக்குமே இந்த நன்மை ஏற்படவேண்டுமல்லவா? செல்வம் சிலரிடத்துமட்டும் தங்கிவிட்டால் போதாது; எல்லோரிடத்திலும் இருக்கவேண்டும். இயந்திரங்களின் உதவியால் கோடிக்கணக்கான மக்களை இன்று ஒருசிலரே ஏவி அதிகாரம் செலுத்திக்கொண்டிருக்கிறார்கள். இயந்திரம் வைத்து நடத்துவதன் காரணம், மனிதர்படுகிற சிரமத்தைக் குறைக்க வேண்டும் என்ற பரோபகாரச் சிந்தையல்ல; பேராசைதான். இந்த அக்கிரமமான அமைப்புமுறை சரியல்ல; இதை ஒழித்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் என் முழு பலத்தையும் கொண்டு இயந்திரத்தோடு போராடி வருகிறேன்."

"அப்படியானல், பாபுஜி, தாங்கள் எதிர்ப்பது, இயந்திரங்களையல்ல. அவைகளை இன்று எங்குமே தவறாக உபயோகிப்பதையே தாங்கள் கண்டிக்கிறீர்கள் என்று கொள்ளலாமா?" என்று ராமச்சந்திரன் ஆவலோடு கேட்டார்.

"தயங்காமல் இதற்கு நான் 'ஆம்' என்று சொல்லி விடுவேன். இருந்தபோதிலும், இன்னொன்றையும் குறிப்பிட விரும்புகிறேன். சயன்ஸின் உதவிகொண்டு மேல் நாட்டார் பல உண்மைகளைக் கண்டு, பல சாதனங்களை அமைத்திருக்கிறார்கள். பொருள் சேர்க்க வேண்டுமென்கிற பேராசையைப் பூர்த்திசெய்யவேண்டி, இந்த உண்மைகளையும் சாதனங்களையும் கருவிகளாக உபயோகிப்பதை முதலில் நிறுத்திவிட வேண்டும். இதனால், தொழிலாளிகளை அளவுக்கு மேற்பட்டு வேலைவாங்குவது நின்றுபோய்விடும்; வாழ்க்கைக்கு இயந்திரங்கள் இடையூறாயிராமல், உதவியாயிருந்து வரும். இயந்திரங்களையெல்லாம் ஒழித்து விடுவது என்னுடைய நோக்கமல்ல; அவற்றைக் கட்டுப்படுத்துவதே என் நோக்கம்."

"தாங்கள் சொல்வதைத் தர்க்கரீதியாகப் பார்த்தால், இயந்திரசக்தியால் இயங்குகிற பெரிய ஆலைகள் எல்லாம் ஒழியவேண்டும் என்றுதானே ஏற்படும்?" என்று கேட்டார் ராமச்சந்திரன்.

"ஆம், அவ்விதம் இயங்குகிற ஆலைகள் ஒழிந்துபோக வேண்டியதுதான்" என்று ஒப்புக்கொண்டார் காந்திஜி. "ஆனால், ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். எதிலும், மனிதனையே பிரதானமாகக் கருதவேண்டும். இயந்திரங்களை உபயோகித்து உபயோகித்து, கால்களும் கைகளும் வலியிழந்து, மனிதன் செயலற்றவனாய்ப் போய்விடக் கூடாது. இருந்தாலும், இந்த விதிக்கு முக்கியமான சில விலக்குகளும் இருத்தல்கூடும். உதாரணமாக, ஸிங்கர் என்பவர் கண்டுபிடித்த தையல் இயந்திரத்தைப் பாருங்கள். மனிதன் கண்டுபிடித்த உபயோகமான சில பொருள்களில் இதுவும் ஒன்று. இந்த இயந்திரத்தைக் கண்டுபிடித்தது சம்பந்தமாக, நயமான ஒரு கதையும் வழங்குகிறது. தம் மனைவி மிகவும் கஷ்டப்பட்டுக் கையாலே தைத்துக்கொண்டிருந்ததைக் கண்ட ஸிங்கர், அவள் பட்டுவந்த கஷ்டத்தைப்

போக்க எண்ணினர். அவள்மீது வைத்திருந்த அன்பு தூண்டியே, அவர் தையல் இயந்திரத்தைக் கண்டுபிடிக்க நேர்ந்தது. இந்தத் தையல் இயந்திரத்தின் மூலமாக, தமது மனைவி பட்ட கஷ்டத்தை மட்டுமன்றி, இயந்திரத்தை வாங்கிக் கொள்ளக்கூடியவர்கள் எல்லோருடைய கஷ்டத்தையுமே அவர் போக்கிவிட்டாரென்று சொல்லலாம்."

"அப்படியானல், தையல் இயந்திரங்களைச் செய்ய, ஒரு தொழிற்சாலை இருந்துதானே ஆகவேண்டும்? இயந்திரசக்தியினல் இயங்கும் தொழிற்சாலை ஒன்றில்லாமல் அவற்றை உற்பத்தி செய்வது சாத்தியமில்லைதானே?" என்று ராமச்சந்திரன் கேட்டார்.

ராமச்சந்திரன் இப்படி எதிர்த்துச் சொல்லியதை காந்திஜி சிரித்தபடியே ஒப்புக்கொண்டார். "ஆம். ஆனல், இப்படியுள்ள தொழிற்சாலைகள் அரசாங்கத்துக்குச் சொந்தமானவையாகவோ அல்லது அவர்கள் ஆதிக்கத்தின் கீழோ இருந்துவரவேண்டும் என்பது என் கட்சி. இந்த அளவுக்கு நான் சமதர்மக் கொள்கையுடையவன் தான். தொழிற்சாலைகள் வைத்து நடத்த அனுமதி கொடுக்கிறபோது, வாழ்க்கைக்கு உவந்த வசதிகளை எல்லாம் செய்து கொடுக்க வேண்டும். லாபத்தை நோக்கமாகக் கொண்டு நடத்துவதற்குப் பதிலாக, மனித சமூகத்தின் நலத்தை நோக்கமாகக் கொண்டே ஆலைகளை நடத்தவேண்டும். இதற்கு அன்பு தூண்டுகோலாய் இருக்கலாமேயன்றி, பொருளாசை தூண்டுகோலாய் இருத்தல் கூடாது. தொழிலாளர்களுடைய நிலைமையில் ஒருமாற்றம் ஏற்படவேண்டும். பணத்தைக் குவிக்கவேண்டும் என்ற பித்து ஒழியவேண்டும். வர்ழ்க்கை நடத்துவதற்குப் போதிய ஊதியம் கிடைக்கச் செய்யவேண்டும். அதோடு, தினசரி வேலையில் அலுப்பு ஏற்படாதபடி தொழிலாளருக்குச் சௌகரியங்களையும் செய்து கொடுக்கவேண்டும். இதுவே நான் விரும்புகிற மாற்றம். இந்த மாற்றம் ஏற்படுமானல், இயந்திரத்தினலே, முத

லாளிகளுக்கும் அரசாங்கத்துக்கும் எவ்வளவு நன்மை உண்டோ அவ்வளவு நன்மை தொழிலாளிகளுக்கும் ஏற்படும்; இப்போதுள்ள பணப் பைத்தியமும் நின்றுபோகும். வாழ்க்கைக்கு உவந்த சௌகரியமான நிலைமையிலே தொழிலாளிகளும் வேலை பார்த்துவருவார்கள். நான் கருதியுள்ள பல விதிவிலக்குகளில், மேலே சொல்லியதும் ஒன்று. தையல் இயந்திரத்தைக் கண்டுபிடிக்கக் காரணமாயிருந்தது அன்பு. மக்கள் படும் சிரமத்தைப் போக்குவதொன்றே நோக்கமாயிருக்க வேண்டுமேயன்றிப் பொருள் திரட்டலாம் என்ற நோக்கம் அடியோடு கூடாது; பரோபகாரமே நோக்கமாக இருக்கவேண்டும். உதாரணமாக ஒன்று சொல்லுகிறேன்: நூல் நூற்கும்போது, ராட்டினத்திலுள்ள கதிர் வளைந்துவிடுகிறது; அதை நிமிர்ப்பதற்கு ஒரு இயந்திரம் கண்டுபிடிக்க வேண்டுமென்பது என்னுடைய ஆசை. கொல்லன் கதிர் செய்வது இதனால் நின்றுபோய்விடாது; அவன் இனிமேலும் கதிர் செய்துகொண்டுதானிருப்பான். ஆனால், கதிர் வளைந்து போகிறபோது, அதை நிமிர்க்கக் கூடிய கருவி ஒன்று, நூற்பவர் ஒவ்வொருவரிடத்திலும் இருக்க வேண்டும். ஆகவே, பொருளைக் குவிக்கவேண்டும் என்கிற ஆசை தூண்டுகிறது என்பதில்லாமல், அன்பு தூண்டுகிறது என்று ஏற்பட்டுவிட்டால், எல்லாம் சரியாய்ப் போய்விடும்."

ராமச்சந்திரனுக்கு இது அவ்வளவாகத் திருப்தியளிக்கவில்லை. காந்திஜி இயந்திரங்கள் யாவற்றையுமே வெறுப்பவரென்று அவர் எண்ணியிருந்தார்; இது ஓரளவுக்கு நியாயந்தானென்பது அவர் கருத்து. ஆகவே, விஷயத்தை இன்னும் துருவி ஆராய விரும்பினார். ஆனால், நேரமோ அதிகமாய்விட்டது; கேட்கவேண்டிய கேள்விகளோ பல இருந்தன. இதையறிந்த காந்திஜி, "ரயில் தப்பி விடுமென்று கவலைப்பட வேண்டாம். நான் உங்களுக்குத் திருப்தியுண்டாகும்படி எல்லாவற்றையுமே சொல்கிறேன். இன்று

காலை எத்தனை கேள்விகளை வேண்டுமானாலும் கேட்கலாம்; எனக்கு அதனால் ஒரு சிரமமும் ஏற்படாது" என்று சிரித்துக்கொண்டு சொன்னார்.

ராமச்சந்திரன் கேட்கவேண்டிய கேள்விகள் இன்னும் முடிந்துபோகவில்லை. காலை நேரம் முழுதும், எவ்வளவு வேண்டுமானாலும் கேட்கலாமென்று காந்திஜி தெரிவித்ததும், ராமச்சந்திரனுக்குத் தைரியம் பிறந்தது. அவர் கேட்ட அடுத்த கேள்வி விவாகத்தைப்பற்றியதாகும்.

## III

## விவாகம்

**"முக்திநிலையே மனித வாழ்க்கையின் லட்சியம்..............இந்த உயர்ந்த லட்சியத்தை அடைவதற்கு மணவாழ்க்கை தடையாயிருக்கிறது. ஏனெனில், மணம் செய்துகொள்வதனால் உடலுக்குள்ள தளைகள் பலப்பட்டு விடுகின்றன."**

"நான் கேட்க விரும்புகிற மூன்றாவது கேள்வி மணவாழ்க்கையைப் பற்றிய கேள்வி. மணவாழ்க்கை அவசியமானதுதான் என்பதைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளுகிறீர்களா அல்லது எதிர்க்கிறீர்களா?" என்று ராமச்சந்திரன் கேட்டார்.

"இந்தக் கேள்விக்கு நான் விரிவாகப் பதில் சொல்ல விரும்புகிறேன்" என்றார் காந்திஜி. "முக்திநிலையே மனித வாழ்க்கையின் லட்சியம். முக்தி யென்பது பிறவியறுத்த நிலை; உடலுக்குள்ள பாசத்தளைகளை யறுத்து, இறைவனோடு கலத்தலே முக்தியாகும். ஹிந்து என்ற முறையில் இதுவே எனது நம்பிக்கையாகும். இந்த உயர்ந்த லட்சியத்தை அடைவதற்கு மணவாழ்க்கை தடையாய் இருக்கிறது. ஏனெனில், மணம்செய்துகொள்வதனால் உடலுக்குள்ள தளைகள் பலப்பட்டு விடுகின்றன. பிரமசரியத்தினாலே பெரிய அனுகூலமுண்டு; அதன் உதவிகொண்டு ஒருவன் கடவுளிடம் அடைக்கலம் புகுந்துவிட முடியும். குழந்தைகளைப் பெற்றுத் தன்னினத்தைப் பெருக்குவ

தைத் தவிர, மணவாழ்க்கையால் வேறு என்ன பயனைக் கண்டிருக்கிறார்கள்? மணவாழ்க்கை வேண்டுமென்று பரிந்து பேசவேண்டிய அவசியம் இல்லை. அது, தானாகவே பரவும் இயல்புடையது. மற்றொருவர் முயன்று அதைப் பரப்பவேண்டியதில்லை.''

"நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால், எல்லோரிடத்திலுமே பிரமசரிய விரதத்தையே எடுத்துப் பேசவேண்டும், எங்குமே அதைப்பற்றிப் பிரசாரம் செய்ய வேண்டும்என்று ஏற்படுகிறதே!" என்றார் ராமச்சந்திரன்.

"ஆம்" என்று காந்திஜி சொல்லவே, ராமச்சந்திரன் குழப்பமடைந்து போனார். தொடர்ந்து, காந்திஜி சொன்னார்: "படைப்புத் தொழிலே நின்றுபோய்விடும் என்ற அச்சம் உங்களுக்கு இருக்கிறதா? அப்படி ஒன்றும் ஏற்பட்டுவிடாது. மனிதவர்க்கம் இதனால் அழிந்துவிடாது. ஆனால் உயர்ந்த நிலையையே அடையும்.''

"ஒரு கலைஞன் அல்லது ஒரு கவிஞனிடம் அரியதொரு மேதாவிலாசத்தைக் காண்கிறோம். இவ்வரிய மேதாவிலாசத்தை அவருடைய சந்ததி மூலமாக உலகத்தார் அடையும்படி செய்யவேண்டியது அவசிய மல்லவா?" என்று ராமச்சந்திரன் கேட்டார்.

"அவசியமல்ல" என்று காந்திஜி அழுத்தமாகச் சொன்னார். ''இத்தகைய அறிவாளிகளுக்குக் குழந்தைகள் சிலவே இருக்க முடியும்; ஆனால், சிஷ்யர்களின் கூட்டமோ ஏராளமாக இருக்கும். உலகத்துக்கு வழங்கவேண்டிய நன்மைகளையெல்லாம் இந்தச் சிஷ்யர்கள் மூலமாக எளிதில் வழங்கமுடியும்; சிஷ்யர்களைப்போல் வேறு எவராலுமே இவற்றை நன்கு பரப்பமுடியாது. இப்படி ஏற்படுகிற உறவை உயிருக்கும் உணர்வுக்கும் ஏற்படுகிற சம்பந்தம் என்று சொல்லிவிடலாம்; இந்தச் சம்பந்தத்தினால் தோன்றும் உண்மையான சிஷ்யவர்க்கத்தைத் தெய்வப்பிறவி

என்று சொல்லலாம். மணவாழ்க்கையை அதனுடைய போக்கின்படியே விட்டுவிட வேண்டும். மணவாழ்க்கையால் மனிதவர்க்கம் பெருகுகிறதே யன்றி, அபிவிருத்தியடைய வில்லை; மணவாழ்க்கையிலே காம உணர்ச்சியே பிரதானமாய்ப் போய்விடுகிற காரணம் பற்றி.''

"தாங்கள் பிரமசரிய விரதத்தையே வற்புறுத்திச் சொல்லிக்கொண்டு வருகிறீர்கள். ஆண்ட்ரூஸுக்கு இது பிடிக்கிற காரியமா, அல்லவே!"

"இது எனக்குத் தெரியும். பிராடெஸ்டண்ட் சமயத்தினலேயே இந்தவிபரீதம் ஏற்பட்டது. பிராடெஸ்டண்ட்சமயத்தால் பல நன்மைகள் விளைந்ததுண்டு; என்ருலும், அதில் சில குறைகளும் உண்டு. பிரமசரிய விரதத்தை இகழ்ந்து வருவது, அதன் குறைபாடேயாகும்" என்ருர் காந்திஜி.

"அந்தக் காலத்திலிருந்த பாதிரிமார் மிகவும் கேவலமாக வாழ்க்கை நடத்தினர்கள். அந்த வாழ்க்கை காரணமாகவே, பிரமசரிய விரதத்தைப் பிராடெஸ்டண்ட் சமயம் இகழ நேர்ந்தது."

"ஆனல், பாதிரிமார் செய்த தவறுகளுக்குக் காரணம் பிரமசரிய விரதமன்று; அந்த விரதத்தில் இயல்பாக எந்தக் குறைபாடும் கிடையாது. பிரமசரிய விரதம் காரணமாகவே கத்தோலிக்கசமயம் இன்று உயிருடன் இருந்து வருகிறது" என்ருர் காந்திஜி.

## IV

## நூல் நூற்றல்

''இந்தியாவில் வந்திறங்கும் அன்னியத் துணி ஒவ்வொரு கெஜமும், என்ன செய்கிறது: பசியால் மெலிந்து வாடிவதங்கும் ஏழைமக்களின் உணவில் ஒரு கவளத்தைப் பறித்துக்கொண்டு போய்விடுகிறது.''

ராமச்சந்திரன் கேட்ட கடைசிக் கேள்வி, 'நூல்ச் சந்தா'வைப் பற்றியது. காந்திஜி பட்டினி கிடக்கத் தொடங்கிய பிறகே, சாந்திநிகேதனத்திலுள்ள மூன்று

நண்பர்களும் தானுமாக நூல் நூற்கத் தொடங்கினோம் என்று பேச்சின் ஆரம்பத்திலேயே ராமச்சந்திரன் தெரிவித்துக் கொண்டார். எல்லோரும் நூல் நூற்க வேண்டுமென்ற கொள்கையில் தமக்கு நம்பிக்கை உண்டென்றும் சொன்னார். காங்கிரஸ் மகாசபை தன் அங்கத்தினரை நூல் நூற்கும்படி வற்புறுத்துவதன் நோக்கம் என்னவென்பது தமக்கு விளங்கவில்லை என்றும் தெரிவித்தார். அங்கத்தினர்கள் தாங்களாகவே நூல் நூற்க இசையவேண்டுமேயன்றி, அவர்களை வற்புறுத்துவது சரியான முறையாகாது என்பது அவர் கருத்து.

"அப்படியா சொல்கிறீர்கள்? தாங்கள் போகிறபோக்கு ஆண்ட்ரூஸின் போக்கைவிடத் தீவிரமாயிருக்கிறதே! காங்கிரஸ் மகாசபை தன் அங்கத்தினர்களை வற்புறுத்துவது அவருக்குப் பிடிக்கவில்லை; ஆனால், நூல்நூற்கும் சங்கமொன்று தோன்றினால், அப்படிப்பட்ட சங்கத்தில் அங்கத்தினராக அவர் சேர விரும்புவார். நீங்களோ அந்தவிதமான சங்கம் எதுவும் கூடாதென்கிறீர்கள்!" என்று காந்திஜி கூறினார்.

இதைக் கேட்ட ராமச்சந்திரன் மௌனமாயிருந்தார்.

இந்த வாதத்திலே காந்திஜிக்கு உற்சாகம் பிறந்தது. அவர் சொன்னார்: "அங்கத்தினர் மதுபானம் செய்யக் கூடாது என்று சொல்லக் காங்கிரஸ் மகாசபைக்கு அதிகாரம் உண்டா? சொல்லுங்கள். அதிகாரமுண்டென்றால், அதுகூட, தனிநபர்களின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தியதாகுமா? ஒருபோதும் ஆகாது; அதற்கு எதிர்ப்பும் இருக்கமாட்டாது. குடியால் வரும் கேடுகளை மக்கள் உணர்ந்திருக்கிறபடியால், இந்தக் கட்டுப்பாட்டை எதிர்க்கமாட்டார்கள். இந்தியாவிலே, இன்று கோடிக்கணக்கான மக்கள் பசியாலும் வறுமையாலும் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள்; இந்த நிலையில் அன்னியத் துணிகளை இறக்குமதி

செய்வது, குடியைவிடப் பெருத்த கேடாகும். ஒரிஸா மாகாணத்தில் பசியாலும் பட்டினியாலும் கோடிக்கணக்கான மக்கள் துன்புறுவதைச் சற்றுச் சிந்தித்துப் பாருங்கள். அங்கே போனபோது, வறுமையால் வாடிய மக்களை நான் நேரில் பார்த்தேன். கைத்தொழிற் பாடசாலை வைத்து நடத்துகிற அன்பரொருவர் என்னை ஒரு பாடசாலைக்கு அழைத்துக்கொண்டு போய்க் காட்டினர். அங்கே கூடை, சமுக்காளம் முதலியவற்றைக் குழந்தைகள் செய்துகொண்டிருந்தார்கள். இந்தச் சாமான்கள் அப்போது தேவையாயிருந்தபடியால், நூல் நூற்கும் தொழிலை அங்கு கற்பிக்கவில்லை. குழந்தைகளின் முகம் 'வேலை செய்கிறோம்' என்ற உணர்ச்சியால் செழிப்பாயும் மகிழ்ச்சியாயு மிருந்தது. இதைவிட்டு, பஞ்சத்தில் அடிபட்ட மக்களைப் பார்த்தபோது, அங்கு நான் கண்டது என்ன? எலும்புந் தோலுமாக, சாவு கிட்டாதா என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த மக்களைத்தான் கண்டேன். எந்த நிலையிலும் அவர்கள் வேலைசெய்யத் தயாராயில்லை; அதனாலேதான் அவர்கள் அந்த நிலையில் இருந்தார்கள். வேலை செய்ய மறுத்தால் சுட்டுக் கொன்றுவிடுவேன் என்று பயமுறுத்தினாலும், அவர்கள் வேலைசெய்ய முன்வர மாட்டார்கள்; சுட்டுக் கொல்லட்டுமென்று சும்மா இருப்பார்கள். வேலை செய்ய மனமில்லாமல் இருப்பது, மதுபானம் செய்வதைவிடக் கேடான காரியம். குடிகாரனிடமிருந்து நாம் வேலை வாங்கிவிட முடியும்; குடித்து மதிமயங்கிப் போனாலும், அவனுள்ளத்தில் மனேதிடம் ஒரு சிறிதாவது மிஞ்சி நிற்கும். விஷயங்களை அறிகிற சக்தியும் இருக்கும். ஆனால், வேலை பார்க்க மனமில்லாமல் பட்டினி கிடக்கிற மனிதர்களோ வெறும் விலங்குகளே. இப்படிப்பட்ட மக்களிடமிருந்து வேலை வாங்குவது முடிகிற காரியமா! எல்லோருமே நூல் நூற்க வேண்டுமென்பதைத் தவிர வேறுவழி எனக்குப் புலப்படவில்லை. இந்தியாவில் வந்திறங்கும் அன்னியத்துணி ஒவ்

வொரு கஜமும் என்ன செய்கிறது: பசியால் மெலிந்து வாடி வதங்கும் ஏழைமக்களின் உணவில் ஒரு கவளத்தைப் பறித்துக்கொண்டு போய்விடுகிறது. இப்போதிருக்கும் நிலையில், பசியால் வருந்தும் மக்கள் ஆனந்தத்தோடும் உற்சாகத்தோடும் உணவைப் பெறுவதற்கு வழி காட்ட வேண்டும்; இதுவே இந்நாட்டுக்கு அவசியமான காரியம். நூற்பதைத் தவிரத் தக்க வழி வேறெதுவுமில்லை. நீங்களும் சிறிது சிந்தித்துப் பார்த்தால், நூல்ச் சந்தாவை எதிர்க்கமாட்டீர்கள். நூல் நூற்பது இன்றியமையாதது என்பதை ஏற்றுக்கொண்ட ஆடவரும் பெண்டிருமே காங்கிரஸில் அங்கத்தினரா யிருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். ஆகவே, அதிலுள்ள அங்கத்தினர் யாவரும் கட்டாயம் நூல் நூற்க வேண்டுமென்று விதிப்பதில் குற்றமென்ன? கட்டாயப்படுத்தாதபடி, நயமாக எடுத்துச் சொல்லி மற்றவர்களை வசப்படுத்த வேண்டும் என்று பேசுவதால் என்ன பிரயோசனம்? காங்கிரஸ் அங்கத்தினர் ஒவ்வொருவரும் மாதந்தோறும் குறிப்பிட்ட அளவு நூல் நூற்பதைவிட, பிறரை வசப்படுத்துவதற்குச் சிறந்த வழி வேறுண்டா? காங்கிரஸ் அங்கத்தினர்கள் தாங்களே நூல் நூற்காமல் இருந்துகொண்டு, மற்றவர்களை நூல் நூற்கும்படி சொல்வது நியாயந்தானா?"

"நூல் நூற்கவில்லை என்பதற்காக, சிலரைக் காங்கிரஸிலிருந்து ஒதுக்கிவிடலாமா? வேறு வழிகளில் அவர்கள் சிறந்த தேசத் தொண்டு செய்யக்கூடுமல்லவா?" என்று கேட்டார் ராமச்சந்திரன்.

"ஏன் ஒதுக்கக்கூடாது என்று நான் கேட்கிறேன். நாலணாக் கொடுத்துத்தான் அங்கத்தினராக வேண்டும் என்பதன் அவசியமென்ன? சொத்துடையவர்களே ஓட்டுக் கொடுக்கலாம் என்ற நியதிக்குக் காரணமென்ன? வயது வரவேண்டுமென்று சொல்லுகிறார்களே, அதன் கருத்தென்ன? இத்தாலியிலே, எட்டு வயதில் பிடில் வாசிக்கும்

திறமையுள்ள ஒரு சிறுவன் இருக்கிறானல்லவா? அவ னுக்கு ஓட்டுரிமை கொடுக்கவில்லை. ஏன்?. ஜான் ஸ்டுவர்ட் மில் என்பவருக்கு ஏழு வயதிலேயே கிரேக்க லத்தீன் பாஷைகளில் விசேஷப் பயிற்சி இருந்ததாம்; அப்படி இருந்தும் அவருக்கு அந்த வயதில் ஓட்டுரிமை இல்லை. ஏன்?. இப்படிப்பட்டவர்களுக்கு ஓட்டுரிமை கிடையாத தற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. எவ்விதமாக ஓட்டு ரிமை யளித்தபோதிலும், ஓட்டுரிமை ஜாபிதாவில் சிலரை விலக்கத்தான் வேண்டியிருக்கிறது. நான் சொல்வதை இன்று அனேகர் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்; என்ன வோ, 'காந்தி சொன்னது தான் சரி' என்று கூறுகிற காலம் நிச்சயமாய் வருமென்றே நம்புகிறேன். அது, ஒருக் கால் நான் இறந்த பிறகு வரக்கூடும்."

இதற்குள் மணி ஏழாகிவிட்டது. ராமச்சந்திரன் போவ தாயிருந்த ரயில் தவறிவிட்டது. ஆனால், அவர் அடைந்த லாபம் எவ்வளவோ அதிகமென்று சொல்ல வேண்டும். மறுநாட் காலையில், புறப்படுமுன், காந்திஜியிடம் சிறிது பேச அவருக்கு அவகாசம் கிடைத்தது. சிறிது நேரமே பேசினாரென்றாலும், அந்தப் பேச்சின் பயனாக, அவருடைய மனம் மாறுதல் அடைந்துவிட்டது.

"ஆகவே, காந்திஜி, உண்மையே மிகவும் முக்கியம். உண்மையும் அழகும் ஒரே பொருளில் தனித்தனியாக இருக்கக்கூடிய அம்சங்கள் அல்ல" என்று, முந்திய நாள் பேசியதையே அன்றும் ராமச்சந்திரன் தொடர்ந்து சொன்னார்.

"உண்மையே மிகவும் முக்கியம். அதையே நாம் தேடிக் காணவேண்டும்" என்று காந்திஜி முன்னிலும் அழுத்தமாகச் சொன்னார். "அழகும் நன்மையும் தாமா கவே வந்து சேரும். கிறிஸ்துநாதரைச் சிறந்த கலைஞர் என்றே நான் சொல்வேன். அவர் உண்மைத் தத்துவத் தைக் கண்டு, அதைத் தெளிவாகச் சொன்னார். முகம்மது

நபியும் அப்படியே. குரானைச் சிறந்த இலக்கியமென்று அரபிமொழியறிந்த நிபுணர்கள் சொல்லுகிறார்கள். கிறிஸ்துவும் முகம்மதும் முதலில் உண்மையை நாடினார்கள். இந்த நாட்டத்தினால், அவர்கள் வாக்கிலே அழகும் இயல்பாகவே அமைந்தது; ஆயினும், கலை சம்பந்தமாக இவர்கள் இருவரும் ஒன்றும் எழுதிவைக்கவில்லை. இத்தகைய அழகையும் உண்மையையும் காணவே நானும் ஆசைப்படுகிறேன்; அதற்காகவே வாழ்ந்து வருகிறேன், அதற்காகவே உயிர் விடவும் தயாராயிருக்கிறேன்."

இயந்திர சம்பந்தமாக காந்திஜி கொண்டுள்ள அபிப்பிராயம் ராமச்சந்திரனுக்குச் சங்கடம் தருவதாயிருந்தது. அதை மறுபடியும் குறிப்பிட்டார். "தையல் இயந்திரத்தையும் நூல் நூற்கும் கதிரையும் தாங்கள் விதிவிலக்காகச் சொன்னீர்கள். ஆனால், உங்கள் விதிவிலக்கு எவ்வளவு தூரம் போய்நிற்குமென்று தெரியவில்லையே?" என்று கேட்டார்.

"மக்களுக்கு உதவிசெய்வதை விட்டுவிட்டு மனிதத் தன்மையை ஒழிக்க முற்படும் காரியம் எதையுமே விலக்கிவிட வேண்டியதுதான். இயந்திரம் ஏற்பட்டதனால் மனிதனுடைய கை கால்கள் முடமாய்விடக் கூடாது."

"நடைமுறையைக் குறித்து நான் சொல்ல வரவில்லை; லட்சிய முறையில் பார்க்கும்போது, எல்லா இயந்திரங்களையுமே வேண்டாமென்று ஒதுக்குவீர்களா? தையல் இயந்திரத்தை விதிவிலக்கென்று சொல்லும்போது, சைக்கில், மோட்டார் போன்றவற்றையும் தாங்கள் விதிவிலக்காகச் சொல்ல வேண்டி வருமல்லவா?" என்றார் ராமச்சந்திரன்.

"அவையும் வேண்டாமென்றே நான் சொல்வேன். மனிதனுடைய அடிப்படையான தேவைகளை அவை பூர்த்தி செய்வதாயில்லை. வேகமாக மோட்டார்காரில் பிரயாணம் செய்ய வேண்டும் என்கிற அவசியம் மனிதனுக்கு அடிப்படையான தேவை அல்ல. ஆனால், ஊசி அப்படி அல்ல;

மனிதனுக்கு அவசியமான பொருள் என்று அதைச் சொல்லிவிடலாம். லட்சிய முறையில் பார்க்கும்போது, இயந்திரங்கள் யாவையுமே வேண்டாமென்றுதான் ஒதுக்க வேண்டும். முக்தியடைய, உடல் துணைபுரிவதில்லை; இவ்வுடலைத் துறந்துவிட்டு, ஆன்மாவுக்குப் பூரண விடுதலையளிக்க நான் விரும்புவேன். இந்த நிலையை ஒட்டி யோசித்துப் பார்க்கும்போது, இயந்திரங்கள் யாவையுமே வேண்டாமென்றுதான் நான் ஒதுக்கித் தள்ளுவேன். வாழ்வதற்கு உடல் அவசியமா யிருப்பதைப்போல, இயந்திரங்களும் வாழ்க்கைக்கு அவசியமாய் விட்டன. இந்த உடம்பைக்கூட நான் ஒரு பூரண இயந்திர மென்றே சொல்வேன். ஆன்ம விடுதலைக்கு உடம்பு தடையாக இருக்குமாயின், அதையும் ஒதுக்கித் தள்ள நேரும்."

"தவிர்க்க முடியாத தீமை என்று தாங்கள், ஏன் அதைச் சொல்கிறீர்கள்? அழகிலேயே அல்லது அழகின் மூலமாகவே உண்மைத் தத்துவத்தைச் சில கலைஞர்களாவது காண முடியாதா?" என்றார் ராமச்சந்திரன்.

"சிலருக்கு அது சாத்தியமா யிருக்கும். இருந்தாலும், கோடிக்கணக்கான மக்களின் சாமானிய பக்குவத்தை வைத்தே நாம் யோசிக்க வேண்டும். எல்லோரையும் அழகின் மூலமாக உண்மையைக் காணும்படி பயிற்றுவது, முடியாத காரியம். முதலில் அவர்களுக்கு உண்மையைக் காண்பித்தால், பிறகு அவர்கள், தாங்களாகவே அழகைக் கண்டுகொள்வார்கள். கனவிலும் நனவிலும் ஒரிஸா மாகாணத்தின் நினைவே என் மனதில் குடிகொண்டிருக்கிறது. அங்கு, பட்டினியால் வாடிவதங்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு உபயோகமா யிருப்பவை யாவும் அழகுடையனவாகவே எனக்குத் தோன்றுகின்றன. வாழ்க்கைக்கு அத்தியாவசியமாயுள்ள பொருள்களை அளிக்க முதலில் நாம் ஏற்பாடு செய்தால், அழகும் சிறப்பும் தாமே அவற்றைப் பின்பற்றி வந்துவிடும்."

நெடுநேரமாய் நடந்த இந்தச் சம்பாஷணை இதனோடு முடிந்தது. காந்திஜியின் ஆசியைப் பெற்றுக்கொண்டு, ராமச்சந்திரன் சாந்திநிகேதனத்திற்குத் திரும்பினார். தாம் இப்போது கேட்டறிந்தவற்றுக்கும், தமது குருவாகிய ரவீந்திரநாத தாகூர் போதித்தவற்றுக்கும் என்ன ஒற்றுமை என்பதையும், அடிப்படையாக என்ன வேற்றுமை என்பதையும் சிந்தித்துக்கொண்டே போனார்.—மகாதேவ தேசாய்

2

# வடிகட்டின கேடு

"ஆங்கிலக் கல்வி காரணமாக நமது ஆண்மையை இழந்து விட்டோம்; நமது அறிவு குன்றிவிட்டது. இக் கல்விமுறை காரண மாக நாம் பேடிகளாகி விட்டோம்."

"ஆங்கிலக் கல்வியினால் கேடு மட்டுமே விளைந்த தென்று சொல்ல முடியாது; நன்மையும் ஏற்பட்டிருக்கிறது. ஏனென்றால், தாங்களும், லோகமான்ய திலகர், ராஜாராம் மோகன்ராய் முதலியோரும் ஆங்கிலக் கல்வியினால் பயனடைந்தவர்களல்லவா?" என்று கட்டாக்கில் நடந்த பொதுக்கூட்டத்தில் ஒரு அன்பர் காந்திஜியைக் கேட்டார். அதற்கு, காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்:

ஆங்கிலக் கல்வி கெடுதலை மட்டுமன்றி, நன்மையையும் செய்திருக்கிறதென்று அனேகர் சொல்லி வருகிறார்கள். இந்த எண்ணமுடையவர்கள் எங்கும்தான் இருக்கிறார்கள். ஆங்கிலப் படிப்பினால் நன்மையை அடைந்துள்ளோம் என்று வேண்டுமென்றே கண்மூடித்தனமாக எண்ணிக் கொண்டிருக்கிறோம். ஆங்கிலேயரும் அப்படித்தான் எண்ணுகிறார்கள். இந்த எண்ணத்தை அறவே அகற்றினாலன்றி, சுயராஜ்யப் போராட்டத்தில் நாம் வெற்றிபெற முடியாது. வடிகட்டிய கேடாய் ஆங்கிலப் படிப்புமுறை இருந்து வருகிறது. இந்தக் கல்விமுறையை ஒழிப்பதற்காக என்னால் இயன்றமட்டும் முயன்று வருகிறேன். இந்தக் கல்வி முறையால் இதுவரையில் எந்த நன்மையும் நாம் அடைந்ததில்லை. நமக்கு ஏற்பட்டுள்ள நன்மைகள், இந்த ஆங்கிலக் கல்வி முறையையும் மீறி ஏற்பட்டனவே யன்றி, இந்தக் கல்வி முறை காரணமாக ஏற்பட்டனவல்ல. ஆங்கிலேயர் இந்நாட்டிற்கு வராமலிருந்தாலும், மற்ற நாடுகளுக்குச் சமமாக நம் நாடும் முன்னேற்றம் அடைந்திருக்கும். மொகலாய

ஆட்சியின் கீழிருந்தாலுங்கூட, நம்மவர்கள் ஆங்கிலமொழியையும் அதன் இலக்கியத்தையும் பயின்றிருப்பார்கள் என்பது திண்ணம். இப்போதுள்ள கல்விமுறை நம்மை அடிமைப்படுத்தியிருக்கிறது; இதனால், ஆங்கில இலக்கியத்தைச் சரியானபடி நம்மால் அறிந்து அனுபவிக்க முடியவில்லை. கேள்விகேட்ட நண்பர் என்னையும் திலகரையும் ராஜா ராம் மோகனரையும் உதாரணமாகக் குறிப்பிட்டார். என்னை ஒரு பொருளாகக் கொள்ள வேண்டாம்; நான் ஒன்றுக்கும் உதவாத துரும்பு. என்னை விட்டுவிடுங்கள். திலகரையும் ராம் மோகனரையும் பற்றி இப்போது கவனிப்போம்.

ராம் மோகனரும் திலகரும் ஆங்கிலம் படியாது இருந்திருப்பார்களாயின்,—ஆங்கிலப் படிப்பு என்ற தொத்து நோய் அவர்களைப்பற்றாதிருந்தால்—இன்னும் எவ்வளவோ பெரிய மகான்களாக அவர்கள் விளங்கி யிருப்பார்கள். ஆங்கிலக் கல்விமீது எனக்கு வெறுப்பில்லை. அதை வேண்டாதபடி உயர்த்திப் பேசுவதையே நான் கண்டிக்கிறேன். இப்போது இருக்கும் ஆட்சியை ஒழித்துவிட வேண்டுமென்று நான் சொல்வதனால், ஆங்கிலமொழியையே ஒழித்துவிட வேண்டும் என்று நான் சொல்லவில்லை. தேசப்பற்றுள்ள ஒரு இந்தியன் ஆங்கிலத்தை எவ்விதம் பயில்வானோ அவ்விதம் பயில்வதையே நான் விரும்புகிறேன். மக்களுக்குப் பொதுவாக சைதன்யர், சங்கரர், கபீர், நானக் போன்றவர்களிடத்திலே என்ன ஈடுபாடு இருந்ததோ அந்த ஈடுபாடு ராம் மோகனரிடத்திலும் திலகரிடத்திலும் இல்லையென்றே சொல்லவேண்டும். இந்தப் பெரியார்களுக்கும் திலகர், ராம் மோகனர் ஆகியவர்களுக்கும் இடையிலுள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம்தான். சங்கரர் ஒருவர் மட்டும் சாதித்துள்ள காரியத்தை ஆங்கிலம் படித்தோர் அனைவரும் ஒன்றுகூடிச் செய்யமுடியாது. இன்னும் எத்தனையோ உதாரணங்களை நான் காட்டமுடியும். குரு கோவிந்தர்

என்னும் பெரியார் ஆங்கிலம் படித்துத்தானு பெரியா ரானுர்?

குரு நானக் என்னும் பெரியார் தீரத்திலும் தியாகத்தி லும் சிறந்ததொரு சமூகத்தைச் சிருஷ்டித்திருக்கிருர். அதையொத்ததொரு சமூகத்தைக் காண்பதரிது. ஆங்கிலம் படித்த எந்த இந்தியனுலாவது இத்தகைய சமூகத்தைச் சிருஷ்டித்துவிட முடியுமா? தான் கொண்ட கொள்கைக் காக உயிரையே தியாகம்செய்த துலீப் சிங்கைப் போன்ற ஒரு வீரனையாவது ராம் மோகனர் தோற்றுவித்திருக் கிருரா? திலகரிடத்திலும் ராம் மோகனரிடத்திலும் எனக்கு மிக்க மதிப்பு உண்டு. ஆங்கிலக் கல்வி பெருதிருந்து, இயல்பாயுள்ள பயிற்சியை மட்டும் பெற்றிருந்தார்களானுல், திலகரும் ராம் மோகனரும் சைதன்யரைப் போல அருஞ் செயல்களைச் செய்திருப்பார்கள். அந்த லட்சிய புருஷர் களைப் போன்ற சமூகம் மீண்டும் தோன்ற வேண்டுமென்று விரும்பினுல், ஆங்கிலக் கல்வி மூலமாக அதைத் தோற்று விக்க முடியாது. சம்ஸ்கிருதமும் இந்துஸ்தானியும் எனக்கு அதிகமாகத் தெரியாதபடியால், எவ்வளவோ இலக்கியச் செல்வங்களை நான் இழந்துவிட்டேன். ஆங்கிலப் படிப்பில் நமக்கு ஏதோ ஒருவித மோகம் இருக்கிறது. அதனுல் ஏற் படும் நன்மைதீமைகளை ஆராய்ந்து பாருங்கள். ஆங்கிலக் கல்வி காரணமாக நமது ஆண்மையை இழந்துவிட்டோம்; நமது அறிவு குன்றிவிட்டது. இக் கல்வி முறை காரணமாக நாம் பேடிகளாகிவிட்டோம். சுதந்திரம் என்றதென்றலிலே நாம் உலவ விரும்புகிருேம்; ஆனுல், ஆங்கிலக் கல்வி முறை அடிமைத்தனத்தைத்தான் உண்டாக்கி விட்டது; இதனுல் நமது சமுதாயம் ஆண்மையை இழந்துகொண்டு வருகிறது. ஆங்கில ஆட்சி ஏற்படுமுன் நாம் அடிமைகளா யிருந்ததில்லை. மொகலாயர் ஆட்சியின் கீழும் நமக்கு ஒரு வகையிலே சுதந்திரம் இருந்தது. அக்பர் காலத்தில் பிரதாபசிம்மன் போன்ற வீரர் தோன்றவில்லையா?

ஔரங்கஸீப் காலத்தில் சிவாஜியைப் போன்ற தேசத் தொண்டர் வளர்ந்தோங்க வில்லையா? ஆனால், நமது நாட்டில் ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்டுள்ள இந்த நூற்றைம்பது வருஷ காலத்திலே, சிவாஜியோ பிரதாபசிம்மனோ நம்மிடைத் தோன்றியதுண்டா!

நமது நாட்டில் அனேக மகாராஜாக்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தம் சமஸ்தானத்து பிரிட்டிஷ் அதிகாரிக்குமுன் முழந்தாளிட்டு வணங்குகிறார்கள்; தாங்கள் அடிமைகளே என்பதை ஏற்றுக் கொள்கிறார்கள். அவர்களைப் பற்றி நமது இளைஞர்கள் குறைகூறும்போது, எனது அனுதாபமெல்லாம் அவர்கள் பக்கமே போகிறது. அவர்களுக்கு இருவகையிலும் கஷ்டம். தங்கள் குடிமக்களை அவர்கள் அடக்கி ஒடுக்குகிறார்களென்றால்,அதற்காக நான் அவர்கள்மேல் குற்றம் சொல்லமாட்டேன். குற்றத்தையெல்லாம் ஆங்கிலேய அதிகாரிகளின் தலைமேலேதான் போடுவேன். அடிமைப் படுத்துவதையே தொழிலாகக் கொண்டுள்ள ஆட்சிமுறைக்கு இவர்கள் அடிமைகளாக இருந்துவருகிறார்கள். இந்த அடிமைப்பேயின் பிடிப்பிலிருந்து விலகிஓடுங்கள் என்றே உங்களை நான் வேண்டுவேன். வீடு வீடாய்ச் சென்று பிச்சை வாங்கினாலும் பாதகமில்லை; அடிமையாக இருந்து உயிர் வாழ்வதைக்காட்டிலும், பிச்சைவாங்கி உண்பது எவ்வளவோ மேலான காரியம். அல்லாதபட்சம் உயிரை விடுங்கள். ஆங்கிலேயர் இந்த நிமிஷத்திலேயே நம் நாட்டைவிட்டு வெளியேறினாலும் அதற்காக நான் ஒரு துளிக் கண்ணீர் சிந்த மாட்டேன். அவர்கள், நண்பர்களாகவும், நம்மோடு சம அந்தஸ்துடையவர்களாகவும், ஊழியர்களாகவும் இருந்து உதவி புரியட்டுமென்றே சொல்லுகிறேன். ஏதோ நம்முடைய சம்மதம் பெற்றே அவர்கள் அதிகாரம் செலுத்துகிறார்கள் என்பதை எந்த விதத்திலும் ஒப்புக்கொள்ளமுடியாது. ஆகாயப்படை,கடற்படை, தரைப்படை ஆகியவற்றை எவ்வளவு வேண்டு

மானுலும் அவர்கள் உபயோகித்துக்கொள்ளட்டும்; ஆனல், நமது சம்மதத்தைமட்டும் அவர்கள் நிச்சயமாகப் பெற முடியாது. இந்தியாவிலே கொள்ளைக்காரர்களே மலிந்திருக்கட்டும்; அதற்காக நீங்கள் பயந்துவிட வேண்டியதில்லை. உங்களுடைய கௌரவத்தை நீங்கள் காப்பாற்ற வேண்டும். உங்கள் கடமையைச் செய்யவேண்டும். சுதந்திரமுடைய இந்தியர்களாய் உயிர் துறப்பதைவிடச் சிறந்தது வேறு உண்டா? ஆங்கிலக் கல்விமுறை ஒரு பைசாசக் கல்விமுறையாகும். அதை அழிப்பதற்காகவே நான் எனது வாழ்க்கையை அர்ப்பணம் செய்திருக்கிறேன்.

# 3

# ஆங்கிலக் கல்விமுறை

"இந்தியாவைப் பாதிக்கிற மூட நம்பிக்கைகள் அனேகம்; சுதந்திர உணர்ச்சியை ஊட்டுவதற்கும், கூர்மையான அறிவை அபிவிருத்தி செய்வதற்கும் ஆங்கிலக் கல்வி அவசியமென்று நாம் எண்ணிக் கொண்டிருக்கிறோமே, அதுதான் யாவற்றையும் விடப் பெரிய மூட நம்பிக்கையாகும்."

கூட்டாக் என்னுமிடத்தில், ஆங்கிலக் கல்வி கற்பதால் விளையும் பயனைப்பற்றி பேசினேன். அந்தப் பேச்சிலுள்ள விஷயத்தை விளக்கிஎழுதும்படி ஒரு நண்பர் என்னைக் கேட்டிருக்கிறார். பத்திரிகையில் வெளிவந்த என் பிரசங்கத்தின் குறிப்பை நான் இன்னும் பார்க்கவில்லை. ஆனாலும், நண்பரது கேள்விக்கு நான் பதில்ச் சொல்ல முன்வருகிறேன்.

ஆங்கிலக் கல்வியைப் போதிக்கும் முறை காரணமாக, ஆங்கிலம் படித்த இந்தியர் அனைவரும் ஆண்மையற்றவர்களாய்ப் போய்விட்டார்கள்; மாணவர்கள் படித்துப் படித்துச் சோர்வடைந்து போனார்கள்; சுயமாக எதுவும் செய்யத் தெரியாமல் மற்றவர்களைப் பார்த்துச் செய்கிற வழக்கமே நமக்குள் அதிகமாகிவிட்டது. இதுவே ஆங்கிலக் கல்வியின் பயனைப்பற்றி நான் கொண்டுள்ள அபிப்பிராயம். பிரிட்டிஷாரின் தொடர்பு காரணமாக, வருந்தத்தக்க எத்தனையோ காரியங்கள் ஏற்பட்டிருக்கின்றன; கல்வி புகட்டுவதில் நமது தாய்மொழியை உபயோகிக்கக் கூடாதென்று விலக்கி வைத்திருப்பது மிகக் கேடான தொன்றாகும். ராம் மோகனரும், லோகமான்ய திலகரும் ஆங்கிலத்திலே படித்து, ஆங்கிலத்திலே சிந்தித்து, தங்கள் சிந்தனைகளை முக்கியமாக ஆங்கிலத்திலேயே வெளியிட வேண்டிய நிலைமை ஏற்பட்டிருந்தது. இந்த நிலைமை இராதிருந்தால், திலகர் இன்னும் எவ்வளவோ சிறந்த கல்வியாளராக விளங்கியிருப்பார்; ராம் மோகனரும் இன்னும் எவ்வளவோ சிறந்த சீர்திருத்தக்காரராக இருந்திருப்பார். நம் நாட்டு மக்களி

டையே அவர்களுக்கு ஆச்சரியமானதொரு செல்வாக்கு இருந்தது. இயற்கைக்கு மாறுபட்ட முறையில் அவர்கள் கல்வி பயிலாமல், இயற்கையோடொத்த முறையில்க் கல்வி பயின்றிருப்பார்களாயின், பொதுமக்களிடையே அவர்களுடைய செல்வாக்கு இன்னும் அதிகமாகியிருக்கும். ஆங்கில நூல்களைக் கற்று அவர்களது அறிவு விருத்தியாயிற்று; சந்தேகம் இல்லை. ஆனால், அத்தனை விஷயங்களையும் தாய் மொழிமூலமாக அடைவதற்கு வசதியிருந்திருக்கவேண்டும். ஒரு தேசம் சிறந்தோங்குவதற்கு மொழிபெயர்ப்பாளர்களையே உண்டாக்கிக் கொண்டிருந்தால் போதுமா? போதாது. பைபிளை ஆங்கிலப் பண்பில்வைத்து எழுதாதிருந்தால், ஆங்கிலேயர் என்ன நிலையில் இருந்திருப்பார்கள் என்று யோசித்துப்பாருங்கள். சைதன்யரும், கபீரும், குருநானக்கும், குரு கோவிந்தரும், சிவாஜியும், பிரதாபசிம்மனும், திலகரையும், ராம்மோகனரையும் விடச்சிறந்தோரென்றே நான் மதிக்கிறேன். ஆனால், இப்படி ஒருவரை மற்றொருவரோடு ஒப்பிடுவது அழகல்ல; எல்லோரும் அவரவர் வழியில் பெரியவர்களேயாவர்.

ஆங்கிலம் படியாது பெரியவர்களான சைதன்யர் முதலியவர்களுக்கு, பொதுமக்களிடை ஏற்பட்ட செல்வாக்கைப்போல ஆங்கிலம் கற்ற ராம் மோகனருக்கும் திலகருக்கும் செல்வாக்கில்லை. ஏற்பட்ட செல்வாக்கும் நிலையானதாயில்லை; எங்கும் பரவியதாயு மில்லை. ஆனாலும், அவர்கள் சமாளித்துள்ள இடையூறுகளை எண்ணிப் பார்க்கும்போது, அவர்களை மாபெரும் வீரர்கள் என்றே சொல்லலாம். ஆங்கில பாஷை மூலமாக அவர்கள் பயிற்சிபெறாமல் இருந்திருந்தால், இன்னும் சிறந்த நன்மைகள் அவர்களால் தோன்றி யிருக்கும். திலகருக்கும் ராம் மோகனருக்கும் தோன்றிய சிறந்த கருத்துக்கள், அவர்கள் ஆங்கிலம் படியாவிட்டால் தோன்றியிருக்கமுடியா தென்பதை என்னால் நம்ப முடியவில்லை. இந்தியாவைப் பாதிக்கிற மூடநம்பிக்

கைகள் அனேகம்; சுதந்திர உணர்ச்சியை ஊட்டுவதற்கும் கூர்மையான அறிவை அபிவிருத்தி செய்வதற்கும் ஆங்கிலக் கல்வி அவசியமென்று நாம் எண்ணிக் கொண்டிருக்கிறோமே, அதுதான் யாவற்றையும்விடப் பெரிய மூடநம்பிக்கையாகும். சென்ற ஐம்பது வருஷகாலமாக, ஒரேஒரு விதமான கல்வித் திட்டந்தான் நம் நாட்டில் இருந்துவந்திருக்கிறது; நமது எண்ணங்களை வெளியிடுவதற்கு ஒரேஒரு பாஷையைத்தான் நம்மீது சுமத்தியிருக்கிறார்கள்; இதை நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். இப்போதிருக்கிற பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் எழுத்தறிவைத் தவிர வேறு எதையும் நாம் பெற இயலவில்லை; இந்தப் படிப்புமுறையும் இல்லாவிட்டால் நாம் எப்படி இருந்திருப்போம் என்பதை வரையறுத்துச் சொல்ல ஆதாரமில்லை. ஆனால், ஒன்றுமட்டும் நமக்கு நிச்சயமாய்த் தெரிகிறது. இந்தியா ஐம்பது வருஷங்களுக்கு முன் இருந்ததைவிட, இப்போது மிகவும் ஏழ்மையான நிலையில் இருக்கிறது; தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் வலிமை அதற்கில்லைதான்; இந்திய மக்களிடையே, உடல்வலிமை குன்றிவிட்டது. இந்தச் சீர்கேடுகளெல்லாம் அரசியல் முறையிலுள்ள குறைபாடுகள் காரணமாகவே வந்தன வென்பது எனக்குத் தெரியாததல்ல; அரசியல் முறையிலுள்ள குறைகள் எல்லாவற்றிலும் மிக்க கேவலமானது, இந்த ஆங்கிலக் கல்வி முறைதான். நமது நாட்டில் பழமையாக இருந்த கல்விமுறை பயனற்றதென்று, நம்மை ஆட்சி புரிய வந்த ஆங்கிலேயர் உண்மையாகவே கருதினார்கள். ஆகவே, அவர்கள் வகுத்த புதுத்திட்டமானது, கருத்தளவிலும் தவறாயிற்று, செயல் முறையிலும் தவறாயிற்று. இந்தத் திட்டமானது பாதகத்திலேயே வளர்ந்ததென்று சொல்வேன்; ஏனென்றால், இந்தியர்களின் உடலையும் உணர்வையும் உயிரையுமே குன்றச் செய்யும் நோக்கத்தோடல்லவா எழுந்தது இந்தக் கல்வித் திட்டம்!

# 4

# ஹிந்திப் பிரசினே

"வடக்கே ஸ்ரீநகரிலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரையிலும், மேற்கே கராச்சியிலிருந்து கிழக்கே திப்ருகார் வரையிலும் பரந்துள்ள இந்தியாவை ஒருசேரச் சிறிதுநேரம் மனதால் எண்ணிப் பாருங்கள். இந்தியர் என்ற முறையிலே இவ்வாறு எண்ணுவது அவசியமல்லவா? அப்படி எண்ணும்போது, ஹிந்திபாஷை எவ்வளவு அவசியமென்பதை உணர்ந்துகொள்வீர்கள். இவ்வாறு சேர்த்து எண்ணுவதற்கு ஹிந்திமொழியொன்றே துணைசெய்யுமென்பதையும் அதைக் கற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதையும் கண்டுகொள்வீர்கள்."

பெங்களூரில் நடந்த கர்னடக ஹிந்திப் பட்டமளிப்பு விழாவில் காந்திஜி பின்வருமாறு கூறினர்:

பரீட்சையில்த் தேறி, இன்று பட்டம் பெற்றிருப்பவர்களை நான் மனதார வாழ்த்துகிறேன். இவர்கள் இனிமேலும் தொடர்ந்து படித்து அறிவை மென்மேலும் பெருக்கிக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். பொதுவாக, உத்தியோகத்தில் அமர்ந்து அதன்மூலமாகச் சம்பாத்தியம் செய்யலாம் என்பதற்காகவே கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் மாணவர்கள் படிக்கிருர்கள். ஆனல், பரீட்சை முடிந்ததுமே படிப்பையும் புத்தகத்தையும் அவர்கள் மறந்து விடுகிருர்கள். அங்கே படிக்கிறவர்களில் பெரும்பாலோர் அறிவை விருத்தி செய்துகொள்வதற்காகப் படிப்பதில்லை. பட்டம் வாங்கவேண்டும் என்பதற்காகவே படிக்கிருர்கள். ஹிந்திப் பிரசார சபையின் நோக்கம், உத்தியோகம் தேடிக்கொடுப்பதன்று. எனவே, இன்று பரீட்சையில் தேறியவர்களும் பட்டம் பெற்றிருப்பவர்களும் வெறும் பட்டத்தை உத்தேசித்துப் படித்திருக்கமாட்டார்கள் என்பது வெளிப்படை. ஆசிரியர்களிடம் எவ்வளவு படித்திருக்கிறீர்கள் என்பதை

எடுத்துக் காட்டவே இந்தப் பட்டங்கள் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. உங்களில்ச் சிலர் ஹிந்தி பயின்றதன்மூலம் சம்பாத்தியம் செய்யவும் கூடுமென்பது உண்மை. ஆனல், நம்முடைய நோக்கம் அதுவன்று.

இன்று பரீட்சையில்தேறியவர்களுள் பெரும்பாலோர் பெண்களா யிருப்பதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இந்தியத்தாயின் நிலைமை பிற்காலத்தில் செம்மையா யிருக்கப் போகிறதென்பதையும், ஹிந்திப் பிரசார வேலை பிற்காலத்தில் நன்கு நடைபெறப்போகிறதென்பதையும் இது எடுத்துக் காட்டுகிறது. இந்தியப் பெண்கள் செய்கிற தியாகத்தையும், அவர்களுக்கு ஏற்படும் புத்துணர்ச்சியையும் பொறுத்தே இந்தியாவிக்குக் கதிமோட்சம் ஏற்படக்கூடுமென்று நான் உறுதியாக நம்புகிறேன். புராதன காலத்திலுள்ள லட்சிய புருஷர்களையும் பெண்களையும் தெய்வங்களையும் குறிப்பிட்டுச் சொல்லும்போது, பெண்களின் பெயரை முதலில்வைத்தே ஆடவர்களின் பெயரைக் குறிப்பிடுவது வழக்கம். சீதா - ராமன், ராதா - கிருஷ்ணன் என்று சொல்லுகிறோமேயன்றி, ராமன் - சீதா கிருஷ்ணன் - ராதா, என்று சொல்வதில்லை. பெண்களிடையே பேசநேர்ந்த சமயங்களிலெல்லாம் இந்த உண்மையை நான் பலமுறை எடுத்துக்காட்டி வந்திருக்கிறேன். ஏதோ ஒருவித உட்கருத்தை வைத்தே நமது முன்னோர்கள் பெண்களின்பெயரை முதலில்க் குறிப்பிட்டு வந்திருக்கிறார்கள். பெண்களின் தொண்டு சமூகத்திற்கு எவ்வளவு முக்கியமென்பதையும் அதற்குள்ள மதிப்பு எவ்வளவென்பதையும் உணர்ந்தே நாம் அவர்களை இவ்வாறு போற்றி வந்திருக்கிறோம். பரம்பரையாக வந்த இந்தப் பழக்கத்தைச் சொல்லளவில் மட்டுமன்றிச் செயலிலும் பின்பற்றிவருவோமாக.

ஹிந்தி அல்லது ஹிந்துஸ்தானிதான் தேசீய பாஷையாக இருக்க முடியுமென்பதைச் சில வெளிப்படையான காரணங்களைக் கொண்டு நான் இப்போது விளக்கிக்காட்ட

விரும்புகிறேன். உதாரணமாக, கன்னடதேசத்தின் எல்லைக் குள்ளே இருந்துகொண்டு, வெளியே நடக்கிற விஷயங்களில் நீங்கள் சிரத்தை கொள்ளாதிருக்கிற வரையில், உங்க ளுக்குக் கன்னட பாஷைமட்டும் தெரிந்தால்ப் போதுமான தாகும். ஆனல், கன்னடதேசத்திலுள்ள ஒரு கிராமத்திலே இன்று நடப்புவைகளைக் கவனித்துப் பாருங்கள். மக்க ளுடைய எண்ணங்கள் கன்னட தேசம் என்ற அளவோடு நின்றுவிடவில்லை; இந்தியா முழுவதையுமே ஒன்று சேர்த் துப் பார்க்கிற மனநிலை அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. கன்னடதேசத்திற்கு வெளியே நடக்கிற காரியங்களோடும் நீங்கள் தொடர்பு பூண்டிருக்கிறீர்கள். அந்தத் தொடர்பைச் செயல் முறையில் பயன்பெறச் செய்வதற்கு, பொதுமொழி ஒன்று அவசியம் இருந்தாகவேண்டும். சிந்து மாகாணத்தி லிருந்தும், ஐக்கிய மாகாணத்திலிருந்தும் வருபவர்களோடு, கன்னடம் பேசுகிற ஒருவர் பொதுமொழி ஒன்றில்லாமல் எப்படித் தொடர்பு வைத்துக் கொள்ளமுடியும்? ஆங் கிலத்தைப் பொதுமொழியாக வைத்துக்கொண்டால்ப் போகிறது என்று நம்மவர்களில்ச் சிலர் சொன்னதுண்டு; இப்போதும் சிலர் அப்படிச் சொல்லக்கூடும். ஏதோ சில ஆயிரம்பேர்தான் நம்மவர்களில் ஆங்கிலம் படித் திருக்கிறார்கள். அவர்களைப் பொறுத்தவரையில் ஆங்கில மொழியே பொதுமொழியாயிருந்தால் போதுமானதாகும். ஆனல், இந்த ஏற்பாடு உங்களுக்குத் திருப்தி அளிக்காதென் பது நிச்சயம். இந்தியாவில் கோடிக்கணக்கான மக்கள் பல மாகாணங்களில் வசித்து வருகிறார்கள். அவர்கள் ஒருவர்க் கொருவர் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். நீங்களும் அப்படியே விரும்புவீர்கள். இன்னும் பல தலைமுறைகள் நாம் படித்தாலுமே, எல்லோருக்கும் பொதுமொழியாக ஆங்கிலத்தை ஆக்கிக் கொள்ளலாம் என்பது முடியாத காரியம். எல்லோருமே ஆங்கிலத்தைப் படிக்க வேண்டிய அவசியம் என்

னவோ, எனக்குத் தெரியவில்லே. அப்படியே படிப்பதாக வைத்துக் கொண்டாலும், சம்பாத்தியம் செய்ய ஆங்கிலம் உதவுமென்ற நிச்சயமாவது உண்டா? ஆங்கிலம் படிப்ப தால் சம்பாத்தியம் செய்யமுடியு மென்று சிலர் எண்ணுகி ருர்கள். அப்படியே சம்பாதிக்கமுடியு மென்று வைத்துக் கொண்டாலும், ஆங்கிலத்தை எல்லோரும் படித்துவிட்டால் அதற்குள்ள மதிப்புக் குறைந்து விடாதா? தவிர, ஆங்கிலம் படிப்பதில் எவ்வளவோ கஷ்டங்களிருக்கின்றன; ஆனல், ஹிந்தி-ஹிந்துஸ்தானி படிப்பதில் அவ்வளவு சிரமமில்லே. ஆங்கிலம் படிப்பதற்கு நீண்டகாலமாவது போல, ஹிந்தி படிப்பதற்கு ஆகாது. ஹிந்தி - ஹிந்துஸ்தானி பேசுகிற வர்கள், ஹிந்துக்களும் முஸ்லிம்களுமாக, இருபது கோடிக்கு மேல் இருக்கிருர்கள். கன்னடம் பேசுகிறவர்கள், ஆண்க ளும்பெண்களுமாக இப்போது ஒருகோடிக்குச்சற்று அதிக மாக (110 லட்சம்) இருக்கிருர்கள். தங்களுடைய சகோதர சகோதரிகளா யுள்ள இருபதுகோடி மக்கள் பேசுகிற பாஷையைக் கற்கவேண்டு மென்கிற ஆசை இந்தக்கன்னட தேசமக்களுக்கு இல்லாமலா போய்விடும்? மேலும், ஹிந்தி மிக எளிதாகக் கற்கக் கூடியதுதானே? லேடி ராமன் (ஸர். சி. வி. ராமன் மனைவியார்) பேசிய ஹிந்திப்பேச்சை ஒருவர் கன்னடத்தில் மொழிபெயர்த்துச் சொல்ல நீங்கள் இப்போது கேட்டீர்கள். மொழிபெயர்த்துச் சொன்னவர் அனேக ஹிந்திச் சொற்களே அப்படியே உபயோகித் தார். **பிரேமா, பிரேமி, சங்கம், சபை, அத்தியக்ஷகர், பாதம், ஆனந்தம், பக்தி, ஸ்வாகதம், அத்தியக்ஷதம், சம்மேளனம்** போன்ற சொற்கள் கன்னடத்திற்கும் ஹிந்திக்கும் பொது வாகவே இருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். லேடி ராமன் பேசியதை ஒருவர் இப்போது ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொல்வதானல், மேலே சொன்ன சொற்களே யெல்லாம் அப்படியே அவர் கையாண்டிருக்க முடியுமா? ஒருக்காலும்முடியாது. இந்தச் சொற்களுக்கு நேரான ஆங்கி

லச்சொற்கள் கேட்பவர்களுக்கு என்றும் கேளாத புதிய சொற்களாகவேஇருக்கும்.இதையெல்லாம்பார்க்கும்போது, ஹிந்தி பாஷையை எளிதாய்க் கற்றுக்கொண்டு விடலாம் என்று தோன்றவில்லையா? ஹிந்தி கற்பது கஷ்டமானது என்று கன்னட சகோதரர்கள் சொல்லும்போது,எனக்குக் கோபமும் ஆத்திரமும் மட்டும் உண்டாகவில்லை, சிரிப்பும் கூட வருகிறது. தினமும் கொஞ்சநேரம் பயின்ருல், ஒரு மாதத்தில் நிச்சயமாய் ஹிந்தியைக் கற்றுவிடலாம். எனக்கு இப்போது வயது 67. நான் இன்னும் அதிகநாள் இருக்கப் போவதில்லை. அப்படி இருந்தும், இந்தக் கன்னட மொழி பெயர்ப்பைக் கேட்டபோது, தினமும் கொஞ்சநேரம் படித்தால், ஏழெட்டு நாட்களில்க் கன்னடத்தைக் கற்று விடலா மென்று எனக்குத் தோன்றிற்று.கனம் சீனிவாச சாஸ்திரி யாரையும் என்னையும் போன்ற சிலர் நீங்கலாக, இங்குள்ள நீங்களனைவரும் இளைஞர்கள். ஹிந்தியைக் கற்றுக்கொள்வ தற்கு, ஒரு நாளைக்கு நான்கு மணி வீதம் நீங்கள் ஒரு மாதம் செலவு செய்தால்ப் போதும். இதற்கு வேண்டிய உற்சாக மும்ஊக்கமும்உங்களிடம் இல்லாமலாபோய்விட்டது? நமது நாட்டிலிருக்கும் இருபது கோடிமக்களோடு தொடர்பு வைத்துக்கொள்வதற்காக கொஞ்சநேரம் ஒரு பாஷையைக் கற்பது வீணென்ரு கருதுகிறீர்கள்? இருக்கட்டும். உங்களில் ஆங்கிலம் தெரியாதிருக்கும் சிலர், ஆங்கிலம் கற்க எண்ணியதாக வைத்துக் கொள்வோம். நாள் ஒன்றுக்கு நான்கு மணி நேரம் செலவிட்டு ஒரு மாதத்திலேயே ஆங்கிலத்தைப் படித்துக் கொண்டுவிடலாம் என்ற நம்பிக்கை இங்கிருப்பவர்களில் யாருக்காவது உண்டா? இருக்கமுடியாது. தென்னிந்தியாவிலுள்ள நான்கு பாஷைகளிலும் சம்ஸ்கிருதச் சொற்கள் நிறையக் கலந்திருக்கின்றன ; ஆகையால்த்தான் நாம் ஹிந்தியைக் கற்றுக்கொள்வது மிகமிக எளிதாயிருக்கிறது என்று சொல்லுகிறேம். பண்டைக்காலத்தில் தென்னிந்தியாவிற்கும் வட இந்தியாவிற்குமிடையே சம்ஸ்கிருத பாஷை

யின் மூலமாகவே சம்பந்தமிருந்து வந்ததென்பதைச் சரித்திர வாயிலாக அறிகிறோம். இன்றைக்கும் தென்னுட்டிலுள்ள சாஸ்திரிகள் வடநாட்டிலுள்ள சாஸ்திரிகளுடனே, சம்ஸ்கிருத பாஷை மூலமாகவே சர்ச்சை செய்து வருகிறார்கள். நம் நாட்டிலுள்ள வெவ்வேறு மொழிகளுக்குள் இருக்கும் வித்தியாசமெல்லாம் பெரும்பாலும் இலக்கணம் பற்றிய வித்தியாசங்களே. வட இந்திய மொழிகளுக்குள்ளே, இலக்கண அமைப்புங்கூட ஒத்தேயிருக்கிறது. ஆனல், தென்னிந்திய மொழிகளில் இலக்கணவித்தியாசம் அதிகம்; சம்ஸ்கிருத பாஷையின் கலப்பு ஏற்படு முன்னமேயே அவற்றின் சொற்களிலும் பெருத்த வித்தியாசம் இருந்தது. ஆனல், இப்போது தென்னிந்திய மொழிகளில் சம்ஸ்கிருதச் சொற்கள் மிகுதியாகக் கலந்துவிட்டன. இதனுலே, தென்னிந்தியாவில் பிரயாணம் செய்யும்போது, பாஷை சம்பந்தமாக எனக்கு அதிகக் கஷ்டம் ஏற்படுகிறதில்லே. கன்னடம், தெலுங்கு, மலேயாளம், தமிழ் இந்த நான்கு பாஷைகளில் ஒன்றில் யாரேனும் பேசினல், பேசியதன் சாராம்சத்தை நான் எளிதில்த் தெரிந்து கொள்ளுகிறேன்.

இனி, நமது முஸ்லிம் நண்பர்களேப்பற்றி இரண்டொரு வார்த்தை சொல்லவேண்டும். அவர்கள் வசித்து வரும் மாகாணத்தில் வழங்கும் பாஷை அவர்களுக்கு இயல்பாகவே தெரிந்திருக்கும். அதனேடு உருது பாஷையும் தெரியும். ஹிந்திக்கும் அல்லது உருது-ஹிந்துஸ்தானிக்கும் வித்தியாசமே இல்லே. இலக்கணமோ, இரண்டிற்கும் பொது. எழுத்திலேதான் இரண்டிற்கும் வித்தியாசம். பார்க்கப் போனல், இந்தப் பெயர்கள் மூன்றும் ஒரே பாஷையைத்தான் குறிப்பிடுகின்றன வென்பது விளங்கும். இவற்றின் அகராதிகளேப் புரட்டிப்பார்த்தால், பெரும்பாலான சொற்கள் ஒன்ருகவே இருப்பதைக் காண்போம். ஆகவே, எழுத்தைத் தவிர வேறு ஒரு கஷ்டமும் இருக்

கிறதாகத் தெரியவில்லை. அதுவும் காலக்கிரமத்தில் தானே சரிப்பட்டுவிடும்.

தொடக்கத்தில், ஹிந்திதான் தேசீய பாஷையாக இருக்க முடியுமென்று சொன்னேன். வடக்கே ஸ்ரீநகரிலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரையிலும், மேற்கே கராச்சியிலிருந்து கிழக்கே திப்ருகார் வரையிலும் பரந்துள்ள இந்தியாவை மனதால் ஒருசேரச் சிறிதுநேரம் எண்ணிப் பாருங்கள். இந்தியர் என்ற முறையிலே இவ்வாறு எண்ணுவது அவசியமல்லவா? அப்படி எண்ணும்போது, ஹிந்தி பாஷை எவ்வளவு அவசியம் என்பதை உணர்ந்து கொள்வீர்கள். இவ்வாறு சேர்த்தெண்ணுவதற்கு ஹிந்திமொழியொன்றே துணைசெய்யும் என்பதையும் அதைக் கற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதையும் கண்டு கொள்வீர்கள். இந்நாட்டுப் பொதுமொழியாக ஆங்கிலம் இருக்க முடியாதென்பதையும் உங்களுக்கு எடுத்துக் காட்டினேன். ஆங்கில பாஷை மீது எனக்கு வெறுப்பில்லை. சில அறிவாளிகளுக்கு ஆங்கிலம் தெரிந்திருக்கவேண்டியது அவசியமாகும்; எல்லா நாடுகளோடும் தொடர்பு வைத்துக் கொள்ளவும், மேல்நாட்டு சையன்ஸ் ஆராய்ச்சிகளைத் தெரிந்துகொள்ளவும், ஆங்கிலப் பயிற்சி இன்றியமையாதது தான். அளவிற்கு மிஞ்சி ஆங்கிலத்திற்குப் பிரதானம் கொடுக்கச் சிலர் முயல்வதைக் கண்டுதான் எனக்கு மிகவும் வருத்தமுண்டாகிறது. இம் முயற்சி தோல்வியுறும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. அததற்குத் தகுந்த இடத்தில்த்தான், அதது சோபிக்க முடியும்.

ஹிந்தி பாஷையைக் கற்றுக்கொடுப்பதனல், கன்னட பாஷையின் வளர்ச்சி குன்றிப்போகுமென்றும், கன்னட பாஷைக்குரிய ஸ்தானத்தில் ஹிந்தி அமர்ந்துவிடுமென்றும் சிலர் அஞ்சுகிருர்கள். இதை வீண் கலவரமென்றே நான் சொல்லுவேன். பிறமொழிகளின் ஸ்தானத்தில் ஹிந்தி அமர்ந்துவிடும் என்பதற்கு மாருக, ஹிந்தியால் நன்மையே

ஏற்படும் என்று சொல்லவேண்டும். ஹிந்தியைப் பரப்பப் பரப்ப, மற்ற மொழிகள் வளரவும் சக்திபெறவும் நாம் உதவி செய்தவர்களாகிறோம். நான் பல மாகாணங்களி லிருந்து பெற்ற சொந்த அனுபவத்திலிருந்தே இதைச் சொல்லுகிறேன்.

எழுத்தைப்பற்றி ஒருவார்த்தை. நான் தென் ஆபிரிக் காவில் இருந்த காலத்திலேயே சம்ஸ்கிருதத்திலிருந்து வந்த பாஷைகள் யாவற்றையும் தேவநாகர லிபியைக்கொண்டே எழுதுவது நல்லதென்ற முடிவிற்கு வந்தேன். திராவிட பாஷைகளையுங்கூட, தேவநாகர லிபியின் மூலமாகவே எளி தாய்க் கற்றுக்கொண்டு விடலாம் என்பது என் நம்பிக்கை. தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலியவற்றை அந்தந்த மொழிக்குரிய லிபியைக்கொண்டே நான் சில நாள்படித்துவந்தேன். லிபிகள் நான்கையும் தனித்தனியே கற்பது எனக்கு மிகவும் சிரமத்தைத் தந்தது. நான்கு மொழிகளுக்கும் லிபி ஒன்றாயிருந்திருக்குமானால், எவ்வ ளவோ குறுகிய காலத்திற்குள் அவற்றை நான் படித்திருக்க முடியும். இந்தப் பாஷைகளைப் படிக்க என்னைப்போல் ஆவ லோடிருக்கிறவர்களுக்கு, லிபியினால் ஏற்படுகிற கஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல. தென்னிந்தியாவில் இப்போது நான்கு ப்ாஷைகள் இருக்கின்றன. இவை நான்கிற்கும் தேவநாகர லிபியைக் கையாண்டால், ஒரு பாஷை தெரிந்தவர்கள் மற்ற மூன்று பாஷைகளையும் அந்த லிபியைக்கொண்டே, மிக எளிதாகக் கற்றுக்கொள்ளலாம். ஹிந்தியைத் தேசீய பாஷையாக வைத்துக்கொள்ள வேண்டுமென்ற விஷயத் தையும் எல்லாப் பாஷைகளுக்கும் லிபி பொதுவாயிருக்கலா மென்ற விஷயத்தையும் சேர்த்துக் குழப்ப வேண்டாம். இந்திய மொழிகள் யாவற்றையும் கற்க ஆசைப்படுகிறவர் களுக்கு ஏற்படும் கஷ்டத்தை விளக்கிக் காட்டுவதற்காக இதை இங்கே குறிப்பிட்டேனேயன்றி வேறில்லை.

# 5

# ஆங்கில மொழிக்குரிய ஸ்தானம்

"ஏதோ நாகரீக சமூகத்திலே பழகுவதற்கு ஆங்கிலம் தெரிந்திருக்க வேண்டும் என்ற உணர்ச்சியைச் சிறுவர்சிறுமியருக்கு நாம் ஊட்டு தல் கூடாது. இந்த உணர்ச்சியை ஊட்டுவது, இந்நாட்டு ஆண் குலத்துக்கும், அதனிலும் முக்கியமாக, பெண்குலத்துக்கும் தீங் கிழைப்பதாகும்."

நாம் இப்போது கேவலமான அடிமை நிலையில் இருக் கிறோம். இதை விட்டுச் சம அந்தஸ்தை அடைகிற வரையிலும் — அதாவது, அன்னிய ஆட்சியிலிருந்து விடு பட்டு, நம் காரியங்களை நாமே செய்துகொள்ளும் நிலைமை ஏற்படும் வரையிலும் — ஆங்கிலம் படிப்பதை நிறுத்திவிட வேண்டும் என்று மாணவர்களுக்குப் போதித்து வந்திருக் கிறேன். ஹிந்தி படிக்க வேண்டுமென்று சொல்வதோடு கூட இதையும் சேர்த்தே சொல்லி வந்திருக்கிறேன். சுய ராஜ்யம் அடைவதற்கு எவை உதவியாயிருக்கின்றனவோ அவற்றை எல்லாம் செய்ய நாம் முற்படவேண்டும். சுய ராஜ்யம் அடைவதற்கான முயற்சிக்கு எதெது துணை செய் யாதோ, எதெது தடையாயிருக்குமோ, அதையெல்லாம் நாம் நிறுத்த வேண்டும். ஆங்கில பாஷைப் பயிற்சியை அதிக மாக்கிக்கொள்வதனாலே சுயராஜ்யம் நமக்கு விரைவாய் வந்துவிடாது; அதனால் தடைகள் ஏற்படுவது ஓரளவு நிச்ச யம். ஆங்கில அறிவு வளர வளர, சுயராஜ்ய இயக்கத் திற்கே ஆபத்து நேரிடுவது உண்மை என்பதைப் பல துறைகளிலும் நேராகப் பார்த்துவருகிறோம். ஆங்கிலச் சொற்களின் இன்னிசையை நமது காதுகள் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்; நாவோ, ஆங்கிலத்தையே உச்சரிக்க வேண்டும்; அப்போதுதான் நமக்கு விடுதலை யுணர்ச்சி ஏற்படும் என்று பலர் நம்புகிறார்கள். இது வெறும் மயக்கம். இது உண்மையா யிருக்குமானால், சுயராஜ்யம் ஒரு போதும் நமக்குக் கிடைக்கப் போவதில்லை. வியாபாரத் துறையிலே எல்லாத் தேசங்களுக்கும் பொதுவான மொழி

யாக ஆங்கிலம் இருந்துவருகிறது; அரசியல்த் துறைக்கும் அதுவே ஏற்றது. மேலும், ஆங்கிலமொழியில் இலக்கிய வளமும் உண்டு. ஆங்கிலம் படிப்பதன் மூலமாக மேல்நாட்டாரின் சிந்தனைகளையும் பண்பாட்டையும் தெரிந்துகொள்ளலாம். ஆகவே, நம்மில் சிலருக்கு ஆங்கிலம் தெரிந்திருப்பது அவசியந்தான். நாட்டுக்குரிய வர்த்தகம், சர்வதேச அரசியல் ஆகிய துறைகளுக்குரிய காரியங்களை நடத்த ஆங்கிலம் உதவலாம். இதுமட்டுமல்ல; மேல்நாட்டாரின் இலக்கியம், சயன்ஸ், சிந்தனைகள் ஆகியவற்றில்க் காணப்படும் சிறந்த அம்சங்களை ஆங்கிலத்தின் மூலமாக நாம் அறிந்து கொள்ளலாம். இப்படி ஆங்கிலத்தை உபயோகிப்பதுதான் நியாயமான முறையாகும். ஆனல், நமது தாய்மொழி நம் இதயத்தில் வகித்துவந்த உன்னதமான ஸ்தானத்தை ஆங்கில மொழி கவர்ந்துகொண்டு, தாய்மொழியை வெளியே துரத்திவிட்டது. ஆங்கிலேயரும்நாமும்சமநிலையில்ப்பழகாமையால், ஆங்கிலமொழிக்கு இயல்பாக இருக்கவேண்டிய நிலையைவிட மேலான நிலையை அதற்கு நாம் கொடுத்துவிட்டோம். எவ்வளவு நுணுக்கமான விஷயத்தையும் ஆங்கிலப் பயிற்சி இன்றியே ஆராயுந்திறமை இந்தியர்களுக்கு இருக்கவேண்டும். ஏதோ நாகரிக சமூகத்திலே பழகுவதற்கு ஆங்கிலம் தெரிந்திருக்க வேண்டும் என்ற உணர்ச்சியைச் சிறுவர் சிறுமியருக்கு நாம் ஊட்டுதல் கூடாது. இந்த உணர்ச்சியை ஊட்டுவது, இந்நாட்டு ஆண்குலத்துக்கும், அதனிலும் முக்கியமாக, பெண்குலத்துக்கும் தீங்கிழைப்பதாகும். இவ்வளவு இழிவான எண்ணத்தை நாம் பொறுத்துக்கொண்டிருத்தல் முடியாது. சுயராஜ்யம் அடைவதிலுள்ள முக்கியமான அம்சங்களில், ஆங்கில மோகத்தைப் போக்குவது ஒன்ருகும்.

# 6

# ஆங்கிலப் படிப்பு

" பிள்ளைகளுக்குப் பெற்றோர் எழுதும்போதும், மனைவியர்க்குக் கணவன்மார் எழுதும்போதும், தாய்மொழியில் எழுதாமல் ஆங்கிலத்தில் எழுதுவதைச் சிறிதுகூட என்னால் சகிக்கமுடியவில்லை."

அரசியலில் ஏதோ மதிப்பு இருக்கிறது என்பதற்காகவும், வியாபாரத்துறைக்கு உதவியாய் இருப்பதை உத்தேசித்தும், ஆங்கிலத்தைப் படித்து வருகிறார்கள். ஆங்கிலப் படிப்பின்றி உத்தியோகம் கிடைக்காதென்று நமது இளைஞர்கள் எண்ணுகிறார்கள். இப்போதுள்ள நிலைமையில் இது உண்மைதான். ஆங்கிலம் படிக்கவைத்தால் கல்யாணம் செய்துகொடுப்பது எளிது என்றெண்ணி, பெற்றோர் பெண் குழந்தைகளை ஆங்கிலம் படிக்கவைக்கிறார்கள். ஆங்கிலேயரோடு பேசுவதற்கென்றே ஆங்கிலம் படிக்க விரும்பிய பெண்களுமுண்டு. மனைவியர் தங்களோடும் தங்கள் நண்பர்களோடும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்பதற்காக வருந்திய கணவன்மாருமுண்டு. இவர்களை நான் நேரில் அறிவேன். ஆங்கிலத்தைத் தாய்மொழியாக்கிவிட எண்ணி, அனேக குடும்பத்தினர் ஆங்கிலத்தையே பேசிவருவதைப் பார்த்திருக்கிறேன். ஆங்கிலப் பயிற்சியின்றி இந்தியா சுதந்திரம் அடைதல் முடியாத காரியம் என்று நூற்றுக்கணக்கான இளைஞர்கள் நம்புகிறார்கள். இக்கொடிய நோயானது, கல்வி என்றால் ஆங்கிலம் படிப்பதுதான் என்று எண்ணுகிற அளவுக்குப் பரவி, சமூகத்தின் உடலையே அரித்து விட்டது. இவை யாவும், நமது அடிமைத்தனத்தையும் இழிந்த நிலையையுமே எடுத்துக்காட்டுகின்றன வென்பது வெளிப்படை. நமது தாய்மொழிகளைப் படுத்திவைத்திருக்கிற பாட்டையும், அவற்றை வளரவொட்டாமல் நசுக்கிவைத்திருக்கிற நிலைமையையும் பார்க்கும்போது, என் உள்ளம் பதைக்கிறது. பிள்ளைக

களுக்குப் பெற்றோர் எழுதும்போதும், மனைவியர்க்குக் கணவன்மார் எழுதும்போதும், தாய்மொழியில் எழுதாமல் ஆங்கிலத்தில் எழுதுவதைச் சிறிதுகூட என்னால் சகிக்கமுடியவில்லை.

என்னுடைய வீட்டில் யாரும் நுழையாதபடி சுற்றிச் சுவரெழுப்பவேண்டுமென்றோ, சன்னல்களில் காற்றுப் புகாதபடி சாமான்களை வைத்து அடைத்துவிட வேண்டுமென்றோ நான் விரும்புவதில்லை. உலகத்திலுள்ள பல வேறு கலைகளும் நாகரிகமும் யாதொரு தடங்கலுமின்றி என்னைச்சுற்றி வழங்கிவர வேண்டுமென்றே நான் விரும்புகிறேன். ஆனால், எனக்குச் சொந்தமான கலையுணர்ச்சியையும் பண்பாட்டையும் மற்றொன்று வந்து அழித்துவிடுவதை நான் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. கள்ளன் போலவும், பிச்சைக்காரன் போலவும், அடிமை போலவும் இன்னொருவர் வீட்டிலிருந்து வாழ நான் ஒருக்காலும் சம்மதியேன். அசட்டுத்தனமான கௌரவத்திற்காகவோ, சமூகத்தில் ஏதோ சௌகரியம் ஏற்படுமென்பதற்காகவோ, நமது சகோதரிகள் ஆங்கிலம் படிப்பதையும் அதற்காக கஷ்டப்படுவதையும் நான் விரும்பவில்லை. இலக்கிய உணர்ச்சியில் ஈடுபட்ட நமது இளைஞர்களும் இளம்பெண்களும், ஆங்கில மொழியையும் உலகிலுள்ள வேறு மொழிகளையும் எவ்வளவு வேண்டுமானாலும் படிக்கட்டும்; படித்து, படித்ததன் பயனை இந்தியாவுக்கும் உலகுக்கும் பயன்படும் முறையில் ஜகதீஸ் சந்திரபோஸ் போலவும், பி. ஸி. ரே போலவும், தாகூர் போலவும் அள்ளி வழங்கட்டும். இந்த நிலைமையையே நான் மனப்பூர்வமாக விரும்புகிறேன். ஆனால் சிலர், தாய் மொழியை மறந்து, அதைப் புறக்கணிப்பதோடு நில்லாமல், 'இந்த மொழிக்குரிய சமூகத்தில் நாம் பிறந்தோமே!' என்று வெட்கப்படவும் செய்கிறார்கள்; சிறந்த கருத்துக்களைத் தாய்மொழியிலேயே சிந்தனை செய்யவும் சிந்தித்தவற்றை வெளியிடவும் முடியாதென்று நினைக்கிறார்கள்.

இப்படி நினைப்பது சரியே அல்ல. என்னுடைய சமயம், சிறைச்சாலைபோல, மற்றவர்களை வெளியே ஒதுக்கும் சமய மன்று; அதன் வாயில் எப்போதும் திறந்தே கிடக்கும். இறைவன் படைப்பிலே மிகத் தாழ்ந்த உயிருக்கும் அங்கு இடமுண்டு; ஆனால், இறுமாப்புக்கும், சாதித்திமிர், நிறத் திமிர், மத விரோதம் ஆகியவற்றுக்கும் அங்கே இடமில்லை.

7

# அன்னியமொழியால் வந்த அவகேடு

"அன்னிய ஆட்சியால் நம் நாட்டுக்கு விளைந்த கேடுகள் பல. அவற்றில், அன்னிய மொழியாகிய ஆங்கிலமொழியை வலிந்து புகுத்தி, நமது இளைஞர்கள் இழிந்த நிலையடைய வேண்டுமென்ற நோக்கத்தோடு அவர்களை ஆங்கிலம் படிக்கும்படி செய்திருப்பதும் ஒன்று. அன்னிய ஆட்சியின் பயனாய் இந்தியாவில் விளைந்துள்ள மிகப் பெரிய கேடுகளில் இதையும் ஒன்றாகச் சரித்திரம் சொல்லப் போகிறது."

ஐதராபாத் சமஸ்தானத்தின் தலைமைக் கல்வி அதிகாரி நவாப் மஸுத் ஜங் பகதூர் பெண்களுக்குரிய கார்வே சர்வகலாசாலையில் சமீபத்தில் ஒரு பிரசங்கம் செய்தார். அப்போது, தாய்மொழி மூலமாகவே கல்வி போதிக்க வேண்டு மென்பதை மிகுந்த உற்சாகத்தோடும் உணர்ச்சியோடும் அவர் வற்புறுத்திச் சொன்னார். அவருடைய கருத்துக்கு, டைம்ஸ் ஆப் இந்தியா என்னும் ஆங்கிலேயர் பத்திரிகை மறுப்பு எழுதியிருக்கிறது. அதுசம்பந்தமாக என் கருத்தைத் தெரிவிக்கும்படி கேட்டு, எனது நண்பரொருவர் அதிலிருந்து சில பகுதிகளை எனக்கு அனுப்பியிருக்கிறார். அவை வருமாறு:

> உயர்ந்த விஷயமாகவும் பயன் தரத்தக்கதாகவும் இந்தியர் எழுதி வருகிறார்கள் என்பது உண்மையே. அதெல்லாம் மேலை நாட்டுக் கல்வியைக் கற்றதனால் ஏற்பட்டதே ஒழிய வேறில்லை. சென்ற அறுபது வருஷமாக - ஏன், நூறு வருஷமாகவே - ராஜா ராம்மோஹனராய் முதல் மகாத்மா காந்தி வரையும், எடுத்துச் சொல்லக்கூடியதாக ஏதாவது சாதித்திருந்தார்களே யானால், எந்தத் துறையிலானாலும் சரி, அவ்வளவும் ஆங்கிலக் கல்வி கற்றதனாலேயே ஏற்பட்டது. இப்படி ஏற்பட்டதன் காரணம் சில விஷயங்களில் வெளிப்படையாய் இருக்கலாம்; வேறு சில விஷயங்களில் மறைமுகமாக இருக்கலாம்.

இந்த மேற்கோளிலே, மேலைநாட்டு நாகரிகத்தினால் நம்மவர்கள் பயனடைந்தார்கள் என்று அந்தப் பத்திரிகை

கூறுகிறதேயன்றி, உயர்தரக் கல்வி அனைத்தையும் ஆங்கிலத்தில் போதித்ததனுல் விளைந்த பயன் என்று அது கூறவில்லை. மேலைநாட்டு நாகரிகம் நமக்கு அவ்வளவு முக்கியமல்ல வென்றும் அதனுல் பயன் விளையவே யில்லை யென்றும் நவாப் பகதூரோ மற்ற யாருமோ மறுத்துப் பேசவில்லை. இந்தியப்பண்பாட்டை,மேலைநாட்டு நாகரிகம் என்ற பலிபீடத்தில்ப் பலிகொடுப்பதை மட்டுந்தான் ஆட்சேபித்தார்கள். கீழைநாட்டு நாகரிகத்தைவிட மேலைநாட்டு நாகரிகம் சிறந்த தென்று நிரூபிக்க முடியுமென்றே வைத்துக் கொள்வோம். அப்படி நிரூபிக்க முடிந்தபோதிலும், மேலைநாட்டு நாகரிகத்தை இந்தியாவில் புகுத்தவேண்டிய அவசியமில்லை. பிற்காலத்தில் சிறந்து விளங்கவேண்டிய இந்தியச் சிறுவர்சிறுமியரை மேலைநாட்டு நாகரிக முறையிலே பயிற்றுவது இந்தியா முழுவதுக்குமே கேடுபயப்பதாகும். அதனுல் அவர்கள், தங்கள் நாட்டுக்குரிய சிறப்பியல்புகளை யெல்லாம் இழந்தவர்களாய், பொதுமக்களிடமிருந்து வேருகித் தனியே போய்விடுகிறுர்கள்.

மேலைநாட்டு நாகரிகமென்னும் தீய சுழலில் அகப்பட்டிருந்தும், தங்களுக்கியல்பா யுள்ளதொரு பண்பாட்டை நழுவ விடாமல் கைக்கொண்டிருந்த காரணத்தினுலேயே, மேற்கோளில் குறிப்பிட்டவர்களுக்குப் பொதுமக்களிடையே செல்வாக்கிருந்தது. மேலைநாட்டுப் பண்பாடு கலந்திராவிட்டால், தங்களுக்கியல்பாயுள்ள பண்பாட்டினுல்ப் பெறக்கூடிய சிறந்த நன்மைகளையெல்லாம் மேலே சொன்னவர்கள் அடைந்திருக்கக்கூடும்; அவற்றைப் பூரணமாக அவர்கள் அடைய முடியாதபடி மேலைநாட்டுப் பண்பாடுதான் தடைசெய்துவிட்டது. இந்தத் தடை காரணமாகவே, அதை நான் ஒரு தீய சுழல் என்று குறிப்பிட்டேன். என்னைப் பொறுத்தவரையில், மேலைநாட்டுப் பண்பாட்டிற்கு நான் மிகவும் கடமைப்பட்டிருப்பது உண்மையென ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனுல், என்னுடைய தேசமக்களுக்கு என்னுல்

இயன்ற அளவு நான் செய்துள்ள பணியை மேலைநாட்டுப் பண்பாட்டின் உதவிகொண்டு நான் செய்யவில்லை என்பது நிச்சயம்; கீழை நாட்டுப் பண்பாட்டிலே எந்த அளவுக்கு நான் தோய்ந்திருந்தேனே அந்த அளவிற்குத்தான் என்னல் தொண்டுசெய்ய முடிந்தது. ஆங்கிலேயர்போல நடிப்பவனுய், இந்நாட்டின் சிறப்பியல்புகளை இழந்தவனுய், பொது மக்களைப்பற்றி யாதொன்றும் அறியாமலும், அறிய விரும்பாமலும் இருப்பவனுய், அவர்களுடைய நடை உடை பாவனைகளையும் கருத்துக்களையும் ஆர்வத்தையும் இகழ்ந்து ஒதுக்குபவனுய் இருந்திருப்பேனுயின், பொதுமக்கள் சம்பந்தப்பட்டவரையில் நான் ஒன்றுக்கும் உதவாதவனுகத்தான் இருந்திருப்பேன். சொந்தப் பண்பாட்டிலேயே தோய்ந்து வேரூன்றி நிற்க இயலாத நிலையில், இந்த நாட்டு பொருத்தமில்லாத அன்னிய நாகரிகம் ஒன்று வந்து மக்களைப் பற்றிக்கொள்வதனுல், நன்மை எதுவும் விளையப் போவதில்லை. தன்னளவிலே அது எவ்வளவோ நல்லதாயிருக்கலாம்; ஆயினும், நாம் அதைத் தடுத்தே தீர வேண்டியிருக்கிறது; இப்படித் தடுக்கும் முயற்சியிலே நமது மக்களின் சக்தி எவ்வளவோ வீணுய்ப்போகிறது! அதனுல், தேசத்திற்கு ஏற்படும் நஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல.

இதே விஷயத்தை வேருெரு வகையில்ப் பார்ப்போம். சைதன்னியர், குருநானக், கபீர், துளசிதாஸ் முதலிய எத்தனையோ சீர்திருத்தக்காரர்கள் நமக்குள் இருந்திருக்கிறூர்கள்; எவ்வளவோ அரும்பெரும் செயல்களை இவர்கள் சாதித்திருக்கிறூர்கள். செம்மையாய் நடத்தும் ஆங்கிலப் பள்ளிக்கூடம் ஒன்றில் சிறுபிராயத்திலிருந்தே படித்திருப்பார்களானுல், அதற்குமேலாக அவர்கள் என்னத்தைச் சாதித்திருப்பார்கள். இந்தப் பெரிய சீர்திருத்தக்காரர்கள் சாதித்திருப்பதைவிட அதிகமாகவா மேற்சொன்ன கட்டுரையில் குறித்தவர்கள் சாதித்துவிட்டார்கள்? தயானந்தர் இந்தியச் சர்வகலாசாலை யொன்றில்ப் படித்து எம்.ஏ. பட்டம் பெற்றி

ருப்பாராயின், ஏற்கனவே செய்திருப்பதைக் காட்டிலும் அதிகமாக ஏதாவது செய்திருப்பாரா? சிவாஜி என்ற மகா ராஷ்டிர வீரர் மிக எளிய வாழ்க்கை வாழ்ந்து, சாதாரண மனிதரைப் போலவே இருந்து, பேராபத்துக்களை யெல்லாம் எதிர்த்து நின்றார். அவருடைய புகழ் எங்குமே பரவியிருந்தது. இப்போது நம்மிடையே எத்தனையோ ராஜாக்களும் மகாராஜாக்களும் இருக்கிறார்கள். அவர்கள் சுக போகவாழ்க்கையில் வாழ்கிறார்கள்; அவர்கள் பேசுவதெல்லாம் ஆங்கிலந்தான்; சிறுபிராயத்திலிருந்தே மேலைநாட்டு முறைகளிலே ஊறித்திளைக்கிறார்கள். இப்படியெல்லாம் இருந்தும், சிவாஜி பெயரைச் சொன்ன வாயால் இவர்கள் பெயரைச் சொல்ல முடியுமா? பயமென்பதையே அறியாத பிரதாபசிம்மனைக் காட்டிலுமா இவர்கள் சிறந்த அரசர்கள்? அதுதான் போகட்டும். மேலைநாட்டுப் பண்பாட்டின் சிறப்பியல்புகளையாவது இவர்களிடம் காண முடிகிறதா? இல்லையே! ரோமாபுரி தீப்பற்றி எரிந்தபோது, அந்தத் தேசத்தை ஆண்ட மன்னனான நீரோ உல்லாசமாகப் பிடில் வாசித்துக் கொண்டிருந்தானாம்! அவனைப்போலவே, இந்த ராஜாக்களும் மகாராஜாக்களும், தங்கள் நாடு இந்த நிலையிலிருக்கும்போது, லண்டன்நகரிலும் பாரிஸ்நகரிலும் உல்லாசமாகப் பொழுதுபோக்கி வருகிறார்கள். மேலைநாட்டுப்பண்பாடு அவர்களுக்குப் பெருமை தருவதாக இல்லை. இவர்கள் கொண்ட நாகரிகமானது சொந்த நாட்டிலேயே இவர்களை அன்னியர்கள் ஆக்கிவிட்டது. மேலதிகாரிகளாயிருக்கும் ஆங்கிலேயர் இந்த ராஜாக்களை இப்படி ஆட்சி செய்யும்படி விட்டுவைத்திருக்கிறார்கள். தங்கள் குடிகளுக்கேற்படும் இன்பதுன்பங்களில் தாங்களும் பங்குகொண்டு ஆட்சி செய்ய வேண்டியதிருக்க, அப்படிச் செய்யாமல், ஐரோப்பாவுக்குச்சென்று, அங்கு, தங்கள் குடிகள் பாடுபட்டு உற்பத்தி செய்துதந்த பொருளைமட்டுமின்றி, தங்கள் ஆத்மாவையுமே பாழ்படுத்தி வருகிறார்கள்; இதுதான் இவர்கள் மேலைநாட்

டுப் பண்பாட்டினுல்க் கற்றுக்கொண்ட பாடம். இதிலே இவர்கள் பெருமை கொள்ளுவதற்கு என்ன இருக்கிறது?

மேலேநாட்டுப் பண்பாடு நல்லதா கெட்டதா வென்பது பற்றி இங்கே நாம் ஆராயவில்லை. எந்த மொழியிலே கல்வி கற்பிக்கவேண்டும் என்பதே கவனிக்கவேண்டிய விஷயம். இப்போது நமக்கு, கல்வி என்று சொல்லக்கூடியதெல்லாம் உயர்தரப் படிப்புத்தான். அதை ஆங்கிலமொழியின் மூலமாகவே நமக்குப் போதித்துவருகிறுர்கள். இதுதான் இப்போதுள்ளகுறை. ஒருநாட்டுமக்கள் அந்த நாட்டுக்குரிய உயர்ந்த பண்புகளுடன் விளங்கவேண்டுமானுல், அந்த நாட்டு இளைஞர்களுக்கு உயர்தரக் கல்வி மட்டுமன்றி எல்லாக்கல்வியையும் தாய்மொழி மூலமாகவே கற்பிக்கவேண்டுமென்பது அனைவரும் அறிந்த உண்மை. ஆனுல், நமக்கு ஆங்கில மொழி மூலமாகவே கல்வி கற்பிக்கப்படுவதால், இதை இவ்வளவுதூரம் விரித்துச்சொல்ல நேர்ந்தது. பொதுமக்களுடன் இளைஞர்கள் நேருக்கு நேராக நெருங்கிப் பழகவேண்டுமானுல், பொதுஜனங்களுக்குத் தெரிந்துள்ள பாஷையிலேயே கல்வி பயின்று, தங்கள் அறிவைப் பெருக்கியிருக்க வேண்டும்; இல்லை என்றுல், பொதுஜனங்களுடன் தொடர்பு கொள்ள முடியாது; இது கண்கூடான உண்மை. தாய்மொழியையும் அதிலுள்ள இலக்கியச் செல்வத்தையும் படியாமல் அசட்டை செய்துவிட்டு, வேருெரு அன்னிய பாஷையைப் படித்து, அந்தப் பாஷையிலும் அதனுடைய பேச்சுவழக்கிலும் நிபுணராகிவிட எண்ணி, நமது இளைஞர்கள் எத்தனையோ ஆண்டுகளை வீணுக்கி வருகிறுர்கள். இப்படி வீணுக்கியும், தினசரி வாழ்க்கையில் அதனுல் எந்தப் பயனும் அவர்களுக்குக் கிட்டுவதாயில்லை. இவ்வாறு இளைஞர்கள் வீணுகத் தங்கள் சக்தியை விரையம் பண்ணுவது, நாட்டிற்கு அளவிடமுடியாத நஷ்டமாகும். இந்த நஷ்டத்தை யாராலே கணக்கிட்டுச் சொல்ல முடியும்? குறித்த ஒரு மொழியில் சயன்ஸ் சம்பந்தமான

கருத்துக்களையும் வேறு பல நுணுக்கமான விஷயங்களை யும் தெளிவாக எடுத்துச் சொல்லமுடியாதென்றும், அந்த மொழியில் வளர்ச்சிக்கு இடமில்லையென்றும் சிலர் சொல்லி வருகிறார்கள். இதைவிடப் பெரிய மூடநம்பிக்கை வேறு கிடையாது. பேசுகிறவர்களுடைய நடை யுடை பாவனை களையும் வளர்ச்சியையும் அப்படியே பிரதிபலித்துக் காட்டு வதே பாஷையாகும்.

அன்னிய ஆட்சியால் நம் நாட்டுக்கு விளைந்த கேடுகள் பல. அவற்றில், அன்னியமொழியாகிய ஆங்கில மொழியை வலிந்து புகுத்தி, நமது இளைஞர்கள் இழிந்த நிலையடைய வேண்டுமென்ற நோக்கத்தோடு அவர்களை ஆங்கிலம் படிக் கும்படி செய்திருப்பதும் ஒன்று. அன்னிய ஆட்சியின் பய ஞய் இந்தியாவில் விளைந்துள்ள மிகப் பெரிய கேடுகளில் இதையும் ஒன்ருகச் சரித்திரம்சொல்லப்போகிறது. ஆங்கில பாஷை நம் மக்களுடைய சக்தியை உறிஞ்சி விட்டது. அதைப் படித்துப் படித்து நம் மாணவர்களின் ஆயுளும் தேய்ந்து போய்விட்டது; ஆங்கில பாஷை, பொதுமக்களிட மிருந்து இளைஞர்களைப் பிரித்துவிட்டது; படிப்புக்காகும் செலவை எவ்வளவோ அதிகப்படுத்திவிட்டது. ஆங்கிலப் படிப்பையே இன்னும் சொல்லிக்கொடுத்து வரும்படி விட்டு வைத்தால், அது நமது நாட்டின் உயிரையே அபகரித்து விடுமென்பது நிச்சயம். ஆகவே, படித்த இந்தியர்கள் ஆங்கில பாஷையின் மீது வைத்திருக்கிற மோகத்தை எவ்வளவு விரைவிலே உதறித் தள்ளுகிருர்களோ அவ்வள வுக்கு, அவர்களுக்கு மட்டுமன்றி, பொதுவாக, இந்தியர்கள் அனைவருக்குமே அதனல் நன்மையுண்டு.

# 8

# அறிவு வளருகிறதா அல்லது சிதறிப் போகிறதா

"மனிதன் என்றால் வெறும் அறிவு மாத்திரமல்ல, அல்லது ஸ்தூல உடலுமல்ல, உணர்ச்சி மட்டுமோ; அதுவும் அல்ல. அறிவு, உடல், உணர்ச்சி ஆகிய மூன்றும் அழகிய முறையிலே ஒன்று கூடினால்த் தான் மனிதன் ஆகிறான். இவை மூன்றையும் வளர்ப்பதே உண்மை யான கல்விமுறையாகும்."

திருவாங்கூர் சமஸ்தானத்திலும் சென்னை மாகாணத்தி லும் சமீபத்தில் நான் சுற்றுப்பிரயாணம் செய்தபோது, பல மாணவர்களையும் 'அறிவாளிகளையும்' சந்திக்க நேர்ந் தது. அவர்களில்ப் பெரும்பாலோருடைய அறிவு விருத்தி யடைந்திருந்ததாகத் தோன்றவில்லை; சிதறிப்போய்விட்ட தென்றே சொல்லத் தோன்றுகிறது. இந்த நிலைமைக்குக் காரணம் தற்காலத்துக் கல்வி முறையிலுள்ள குறைபாடே. இந்தக் கல்வி முறை அறிவைச் சிதறடித்து விடுகிறது; தவ றான போக்கிலே மனதைச்செலுத்தி அறிவை வளர ஒட்டா மல், தடைப்படுத்துகிறது. சேவாகிராமத்தில் நான் அனுப வத்தில் கண்ட சில ஆராய்ச்சிகள் காரணமாக இந்த கருத்து உண்மை என்பது தெளிவாகிறது. என்னுடைய ஆராய்ச்சி கள் இன்னும் முற்றுப்பெறவில்லைதான்; ஆகவே, அவற்றை இங்கு உதாரணமாக எடுத்துக் காட்டுவதற்கில்லை. கல்வி சம் பந்தமாக இங்கே நான் சொல்லப்போகும் கருத்துக்கள், 1902-ம் ஆண்டிலே தென்னாப்பிரிக்காவில் போனிக்ஸ் ஸெட்டில்மெண்டு என்ற குடியேற்ற ஸ்தலத்தை நிறுவிய காலத்திலிருந்தே, நான் கொண்டுள்ள கருத்துக்களாகும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய புலன்களை நல்ல முறையில்த் தொழிற்படச் செய்வதே அறிவுக்கு உண்மை யான அபிவிருத்தி என்பது என் கருத்து. அறிவும் உடலும் ஒன்றாக வளர்ச்சியடையும்போது, இதயதத்துவத்துக்கும்

ஒரு விழிப்பு ஏற்படவேண்டுவது அவசியம். அப்படி இல்லாமல் உள்ளமும் உடலும் வளர்ச்சி பெற்று, உணர்ச்சிக்கு விழிப்பு ஏற்படவிட்டால், அது கிரமமான வளர்ச்சியாகாது; வெறுங் கோணலாகவே போய்விடும். உணர்ச்சித் தத்துவத்துக்குப் பயிற்சி கொடுக்க வேண்டும் என்று நான் சொல்லும்போது, இதயத்தைப் பண்படுத்துவதென்ற கருத்தோடேயே சொல்லுகிறேன். எனவே, குழந்தையின் உடற்பண்பையும் உயிர்ப்பண்பையும் வளர்க்கும்போது, அதன் இதயப்பண்பையும் வளர்த்து வந்தால்த்தான் உள்ளமானது சரியானபடி எல்லா அம்சங்களிலும் வளர்ச்சியடைய முடியும். இவை மூன்றையும் தனித்தனியே பிரிக்க முடியாது; ஒன்ருய் இயங்குவன அவை. ஆகவே, அவை ஒவ்வொன்றையும் தனித்தனியாக வளரச் செய்யலாம், அல்லது ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் வளரச் செய்யலாம் என்றெண்ணுவது வீண் கனவுதான்.

உடலும், அறிவும், இதயமும் தமக்குள் அழகாக ஒத்தியங்கச் செய்யாமல்க் கல்வி புகட்டுவது காரணமாக என்ன என்ன கேடுகள் விளையுமென்பது கண்கூடாகக் கண்ட உண்மை. இக்கேடுகள் நம்மைச்சுற்றி எங்குமே மலிந்திருக்கின்றன; ஆனாலும் அந்தக் கேடுகளை நம்மால் உணர முடியவில்லை, ஏன்? வேண்டாத தொடர்புகள் இக்காலத்தில் நமக்கு ஏற்பட்டதுதான் இதற்குக் காரணம். நாட்டுப்புற மக்களைப் பாருங்கள். அறிவு, உணர்ச்சி இரண்டையும் பொறுத்தவரையில், அவர்கள் விலங்குகளின் நிலையை அடைந்து விட்டார்களென்றே சொல்லவேண்டும். இது ஒரு புறமிருக்க, பட்டணங்களிலுள்ள பாடசாலைகளிலும் கல்லூரிகளிலும் கல்வி என்ற பெயரால் இன்று அளிக்கப்படும் பயிற்சியானது உண்மையிலே அறிவைச் சிதறடித்து விடுகிறது. அறிவைப் பண்படுத்துவதற்கும் உடற்பயிற்சிக்கும் எவ்விதத் தொடர்பு இருந்து வருகிறது என்பதைக் கருதிப் பார்ப்பதில்லை; தொடர்பு இல்லை என்றே கருது

கிறார்கள். ஆனால், உடல் ஆரோக்கியமாயிருப்பதற்கு ஏதேனும் ஒருவகைப் பயிற்சி இருந்தாக வேண்டுமே! அதற்காக, ஒரு பயனும் அளிக்காத விளையாட்டுக்களை ஏதோ திட்டம் போட்டுவைத்துக் கொள்ளுகிறார்கள்; இதனால் விளைந்த பலன் ரொம்பவும் வருந்தத்தக்கது. அல்லாத பக்ஷம் வெறும் கேலிக்கூத்தென்றே தள்ளிவிடலாம். இந்தத் திட்டத்தின்படி பயின்றுவந்த எந்த இளைஞனும், உடல் வருந்தி உழைக்கும் விஷயத்தில், ஒரு சாதாரணத் தொழிலாளிக்கு ஈடாக நிற்க முடியாது. உடல்வருந்தச் சிறிது உழைத்தாலும் அவனுக்குத் தலைவலி உண்டாகிறது; உடம்பிலே சிறிது வெயில்ப் பட்டாலும் மயக்கம் வந்து விடுகிறது. இந்தத் தலைவலியும் மயக்கமும் 'இயற்கையாக' வரவேண்டியதுதான் என்று அவர்கள் எண்ணுகிற் காரியந்தான் வேடிக்கையிலும் வேடிக்கை. இதயத்தை யொட்டிய பண்புகளோ, தம் இச்சையாக வரைதுறையின்றி, வளர்ந்து முற்றிப் போய் விடுகின்றன. இதன் பயனாக, அவனுடைய ஒழுக்கத்திலும் உணர்ச்சியிலும் வெறுங்குழப்பந்தான் மிஞ்சுகிறது. இதைப் பாராட்டுதற்குரிய தென்று கூட நினைக்கிறார்கள்!

இந்த நிலைக்குமாறாக, ஆரம்பத்திலிருந்தே இதயப் பண்பை நல்ல முறையிலே அபிவிருத்தி செய்த ஒரு குழந்தையைப் பாருங்கள். அவன் பயிலும் கல்வியில் நூல்நூற்றல், தச்சுவேலை, பயிர்த்தொழில்போன்றதொரு பயனுள்ள வேலை இருப்பதாக வைத்துக் கொள்வோம். அவன் செய்து வரும் தொழில்பற்றிய அடிப்படையான உண்மைகளும், கையாளுகிற கருவிகளின் உபயோகமும், அவற்றைச் செய்யும் முறையும் அவனுக்குக் கற்பிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்படியானால், ஆரோக்கியமான திண்ணிய தேகம் அவனுக்கு அமைவதோடுகூட, கூர்மையான அறிவும் அவனுக்கு வாய்க்கும்; அவனுடைய அறிவு வெறும் ஏட்டுச்சுரைக்காயல்ல; தினந்தோறும் பெற்ற

அனுபவத்திலே வேறூன்றி, நேராகக் கண்ட உண்மை அறிவாகும். தனது தொழிலைப் புத்திக்கூர்மையோடு திறமையாகச் செய்வதற்குக் கணிதமும் வேறு சில கலைகளும் அவனுக்கு உபயோகமாக இருக்கும்; தொழிற் கல்வியுடன் பெறும் அறிவுப் பயிற்சி காரணமாக, அந்தக்கலைகளிலும் அவனுக்குப் போதிய அறிவு ஏற்படும். பொழுது போக்குக்காகச் சிறிது இலக்கியப்பயிற்சியும் பெற்றுக்கொண்டால், எல்லா அம்சங்களிலும் பூரணமானதொரு கல்வியைப் பெற்றவனாகிறான். உள்ளமும் உடலும் உயிரும் விரிவடைகின்றன; இயல்பாக ஒன்றோடொன்று பொருந்தி, பூரண வளர்ச்சியைப் பெறுகிறான். மனிதன் என்றால், வெறும் அறிவுமாத்திரமல்ல, அல்லது ஸ்தூல உடலுமல்ல, உணர்ச்சி மட்டுமோ; அதுவும் அல்ல. அறிவு, உடல், உணர்ச்சி ஆகிய மூன்றும் அழகிய முறையிலே ஒன்று கூடினால்தான் மனிதன் ஆகிறான். இவை மூன்றையும் வளர்ப்பதே உண்மையான கல்விமுறையாகும். சுதந்திரம் அடைந்த பிறகுதான் இத்தகைய கல்வியளிப்பது சாத்தியமாகும் என்று சொல்வது மாட்டுக்கு முன்னாலே வண்டியை பூட்டமுயலுகிற கதைதான். கோடிக் கணக்கான நமது மக்கள் இயல்பாயுள்ள, மேற்சொன்னவை போன்ற, தொழில்களைத் திறமையாகச் செய்யப் பழக்கவேண்டும்; அனைவருடைய பொதுநன்மையின் பொருட்டே அவர்கள் பணிபுரிகிறார்கள் என்பதையும் உணரச்செய்யவேண்டும்; இவ்வாறு செய்தோமானால் சுதந்திரம் பெறுகிற காலம் வெகு சமீபம்.

# 9

# மாணவருக்கு அறிவுரை

"ஒரு காரியத்தை அரசாங்கத்தார் செய்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அது தவறு என்று நமக்குத் தோன்றுகிறது. அந்தத் தவறை அரசாங்கத்தாருக்கு எடுத்துக்காட்ட வேண்டுவது நமது கடமையென்று நினைத்தால், அதைக் கட்டாயம் எடுத்துக் காட்ட வேண்டுமென்று உங்களுக்குச் சொல்கிறேன். அவ்விதம் செய்வது ராஜத்துவேஷம் என்று அரசாங்கத்தார் சொன்னாலும், அதற்காகப் பின்வாங்கக் கூடாது; அந்த ராஜத்துவேஷத்தைச் செய்தே தீர வேண்டும். ஆனால், அதைச் செய்வது உங்களுடைய பொறுப்பு. அதனால் ஏற்படும் விளைவுகளை நீங்கள் அனுபவிக்கத் தயாராயிருக்க வேண்டும்."

காந்திஜி சென்னை சென்றிருந்தபோது, சென்னை மாணவர்களெல்லாம் சேர்ந்து ஒய். எம். சி. ஏ. கட்டிடத்தில், கனம் சீனிவாச சாஸ்திரியார் தலைமையில், அவருக்கு வரவேற்பு அளித்தார்கள். அந்த வரவேற்புக்குப் பதில் சொல்லும்போது, காந்திஜி பின்வருமாறு பேசினார்.

தலைவரவர்களே! அருமை நண்பர்களே!!

என் மனைவியைப்பற்றியும் என்னைப்பற்றியும் நீங்கள் என்னவெல்லாமோ சொல்லிப் புகழ்ந்திருக்கிறீர்கள். அனேகமாக, புகழ்வதற்கு ஆங்கிலமொழியில் இனிமேல் ஒரு வார்த்தைகூட நீங்கள் விட்டுவைக்க வில்லையென்று சொன்னால், மிகையாகாது. என்மீது உங்களுக்கு அவ்வளவு அன்பும் அவ்வளவு சிரத்தையும் இருக்கிறது. இதுவரையில் என்னை அளவில்லாமல் புகழ்ந்து பாராட்டிய இடம் எது வென்று கேட்டால், அது சென்னைதான் என்று நான் தயங்காமல் சொல்லிவிடுவேன். (கைதட்டு) சென்னை இப்படிப் பாராட்டும் என்ற நம்பிக்கை எனக்கு எப்போதுமே உண்டு; இதை நான் பலதரம் சொல்லியுமிருக்கிறேன். ஆகவே, தாராள குணம்படைத்த நீங்கள் என்மேல் அன்பை அள்ளி அள்ளிச் சொரிந்தபோதிலும் கூட, நான் ஆச்சரியப்படுவதற்கில்லை. இந்திய ஊழியர் சங்கத்தின் கீழ் நான் பயிற்சி

பெற்று வருகிறேன் என்று ஒருவகையில்ச் சொல்லலாம். இந்தச் சங்கத்தின் தலைவராயிருந்துவரும் கனம் சீனிவாச சாஸ்திரியாரவர்கள், என்னைப் புகழ்ந்திருப்பதைப் பார்த்தாலோ, உங்கள் புகழ்ச்சிக் கெல்லாம் முத்தாய்ப்பு வைத்ததுபோல் இருக்கிறது அது. இந்தப் புகழ்ச்சிக்கெல்லாம் நான் உண்மையில் உரியவன்தானு? "அல்ல" என்று அழுத்தமாகச் சொல்லுகிறது என் இதயம். இருந்தாலும், நீங்கள் கூறும் புகழுரைகளுக்கெல்லாம் தகுதியுடையவனுகும் பொருட்டே நான் இந்தியாவுக்கு வந்திருப்பதாக எண்ணுகிறேன். நான் தக்க ஊழியனுக இருக்க விரும்பினல், உங்கள் புகழ்மொழிக்குத் தகுதி உடையவனென்பதை நான் நிரூபித்துக்காட்டவேண்டும்; அதற்காக எனது வாழ்க்கை முழுவதையுமே அர்ப்பணம் செய்கிறேன்.

நீங்கள் அந்த அருமையான தேசீய கீதத்தைப் பாடினீர்கள்; அதை ஆரம்பித்ததும் நாம் எல்லோரும் அப்படியே எழுந்து நின்ருேம். அந்தத் தேசீயகீதத்தை எழுதிய கவிஞர், இந்தியத்தாயை வருணிப்பதில் தமது சொல்வன்மை முழுவதையும் காட்டியிருக்கிருர். இந்தியத்தாயின் முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டிருக்கிறது; அவளுடைய பேச்சு இனிமையாய் இருக்கிறது; அவளுடைய மெய்யெலாம் நறுமணம் வீசுகிறது; அவள் மகா சக்திவாய்ந்தவள்; உண்மைக்கும் நன்மைக்கும் அவள் உறைவிடம். இந்தியாவிலே பாலும் தேனும் ஆருக ஓடுகிறது. வளமிக்க வயல்கள்—கனி வர்க்கங்களும் தானியவகைகளும்—இங்கே நிறைந்துள்ளன என்றெல்லாம் கவிஞர் வருணித்துக் கொண்டே போகிருர். இந்தியாவில் வாழும் மக்களைப்பற்றி அவர் சொல்வதைப் பார்த்தால், அம்மாதிரி மனிதர்களை அற்புதமானதோர் சத்திய யுகத்தில்த் தான் காணமுடியுமென்று தோன்றுகிறது. கவிஞர் நமக்கு ஒரு தனியான இந்தியாவைப் படம் பிடித்துக் காட்டுகிருர். அந்த இந்தியாவானது உலகம் முழுவதையும், மக்களினம் அனைத்தையும்

தன் வசப்படுத்தி யிருக்கிறது ; ஆனால், எப்படி ? தனக்குத் தான் வலிமை அதிகம் என்ற காரணத்தால் அல்ல; தனது ஆன்மபலம் என்ற துணைகொண்டே அந்த நாடு உலகத்தையும் மக்களினத்தையும் வெற்றிகொண்டிருக் கிறது. இந்தியாவை ஒரேபடியாய்ப் புகழும் இந்தக் கீதத்தை நாம் பாடுவது பொருத்தமாகுமா? "இந்தக் கீதத்தைக் கேட்க ஆரம்பித்ததுமே நான் எழுந்துநின்றது சரிதானா?" என்று என் மனதில் ஒரு கேள்வி எழுகிறது. இந்தத் தேசீய கீதத்தில்ச் சொல்லியுள்ளபெருமைகள் யாவும் இன்று இந்தி யாவில்க் காணப்படுகின்றனவா என்றால்,இல்லை. இதுதான் உண்மை. வருங்கால இந்தியா எப்படி இருக்கவேண்டும் என்பதைக் கவிஞர் நமக்குப் படமாக வரைந்து காட்டு கிறார். நமது தாய்நாட்டை வருணிப்பதில் கவி கையாண்ட சொற்களை எல்லாம் உண்மையாக்க வேண்டுவது உங்க ளுடையபொறுப்பு. அதற்கு,இந்தியா உங்களைத்தான் நம்பி இருக்கிறது. இன்று இந்தியா இருக்கும் நிலையில், இந்த. வருணனை பொருத்தமற்றதாகவே எனக்குத் தோன்று கிறது. அவர் இந்தியாவின்மேல் ஏற்றிக்கூறியிருக்கும் சிறப்புக்களை எல்லாம் மெய்ப்பிப்பது உங்களுக்கும் எனக்கு முரிய கடமையாகும்.

சென்னையில்க் கல்வி பயின்றுவரும் உங்களுக்கும், இந்தியாவில் ஏனைய பகுதிகளிலுள்ள மாணவர்களுக்கும், சரியான முறையில் இன்று கல்வி கற்பிக்கப்படுகிற தென்று நீங்கள் கருதுகிறீர்களா? இந்தக் கல்வியைக் கற்றதன் பயனாக, மேற்கூறிய லட்சியத்தை நிறைவேற்றி வைக்க உங்களால் முடியுமா? அதற்குத் தகுதியுடையவர் களாக இந்தக் கல்வி உங்களைச் செய்யுமா? உங்களிடம் அமைந்துள்ள சிறந்த பண்புகளைப் பிரகாசிக்கச் செய்ய இந்தக் கல்விமுறை உதவுமா? அரசாங்கத்துக்கும் வர்த்தக நிலையங்களுக்கும் வேண்டிய குமாஸ்தாக்களைத் தயாரித்துக் கொடுக்கும் தொழிற்சாலைபோல் இந்தக் கல்விமுறை

இருக்கிறதல்லவா? நீங்கள் பயின்றுவரும் கல்வியின் நோக்கம் உத்தியோகத்தை மட்டும் பார்ப்பதுதானு? இந்த நோக்கத்தோடுதான் நீங்கள் கல்வி கற்கிறீர்களென்ருல், உங்கள் லட்சியமும் இதுதான் என்ருல், கவிஞர் கண்ட கனவை ஒருநாளும் நனவாக்கமுடியாது; அப்படி முடியாமற்போய் விடுமோ என்றும் அஞ்சுகிறேன். நவீன நாகரிகமென்ருல் எனக்குப் பிடிக்கவேபிடிக்காது. இப்போது மட்டுமல்ல, எப்போதுமே அதற்கு விரோதியாய்இருந்து வருகிறேன். இதை எனது எழுத்து மூலமாகவும், பேச்சு மூலமாகவும், நீங்கள் தெரிந்து கொண்டிருக்கக்கூடும். ஐரோப்பாவில் இன்று என்ன நடக்கிறதென்று பாருங்கள். நவீன நாகரிகத்தின் காலில் அகப்பட்டு, நசுங்கி, ஐரோப்பா கண்டம் அலறுகிறது. இதை நீங்கள் ஒப்புக்கொண்டால், அந்த நாகரிகத்தை நமது நாட்டில் கண்மூடித்தனமாய்ப் பின்பற்றும் விஷயத்தில் நீங்கள் மட்டுமல்ல, உங்களினும் பெரியவர்களுங்கூட, சற்று நிதானித்து யோசிக்கவேண்டிவரும். 'நம்மை ஆண்டுவருபவர்களல்லவா, இந்த நாகரிகத்தை நம் நாட்டில் புகுத்துகிறவர்கள்? அப்படியிருக்கும்போது, அதை நாம் என்ன செய்யமுடியும்'? என்று சிலர் சொல்லுவதைக் கேட்டிருக்கிறேன். ஆனுல், ஒரு நாகரிகத்தைத் தழுவிக்கொள்ள நீங்கள் தயாராக இல்லையென்ருல், அதை உங்களிடம் புகுத்துவது எந்த அரசாங்கத்தாராலும் முடியாதகாரியம். இது எனது திடமான நம்பிக்கை. அப்படியே அரசாங்கத்தார் அந்த நாகரிகத்தை நம்மிடையே புகுத்துவதாக வைத்துக் கொள்வோம்; ஆயினும், அந்த நாகரிகத்தைப் புகுத்தும் அரசாங்கத்தாரை நாம் ஏற்றுக்கொண்டபோதிலும், அவர்கள் புகுத்தப் பார்க்கும் நாகரிகத்தை ஏற்காமல் தள்ளிவிடுவதற்கு வேண்டிய வலிமை நம்மிடம் இருக்கவே செய்கிறது. இது சம்பந்தமாக நீங்கள் தவருன அபிப்பிராயம் வைத்துக் கொள்ளவேண்டாம். (கைதட்டு). பிரிட்டிஷ் மக்கள் நம்மோடு வாழ நேர்ந்துவிட்டதென்று நான் பல இடங்களில்ச்

சொல்லி வந்திருக்கிறேன். ஏன் அவர்கள் நம்முடன் வாழ நேர்ந்த தென்பதை, நான் இப்போது விளக்கிச் சொல்ல விரும்பவில்லை. சிறப்புவாய்ந்த நமது தலைவர் இந்தியாவில்ப் பண்டைக் காலத்திலிருந்த ஞானிகளைப்பற்றிச் சொல்லக் கேட்டீர்கள். நாம் அந்த ஞானிகளின் வழித்தோன்றல் கள் என்பதைச் செயலிலே காட்டவேண்டும். அப்போது தான், கேவலம் உடல் வலிமையல்ல, "அன்பே" தனது உபதேசம் என்பதை இந்தியா உலகெங்கும் எடுத்துரைக்க முடியும். போரில் வென்று வாகை சூடிய வீரரனைவரையும் வெற்றிகொள்ளும் பேறு உங்களுக்கு அப்போதுதான் கிடைக்கும். இரத்தத்தைச் சிந்தாது, ஆன்ம பலத்தினு லேயே நீங்கள் வெற்றிகொள்ள இயலும். இந்தியாவிலே இன்று அரசியலின் பெயரினுல் கொலைகள் நடக்கின்றன; கொள்ளைகள் நடக்கின்றன; இவற்றைக் கவனிக்கும் போது, இந்தக் கொலை, கொள்ளை சம்பந்தமாக நம்முடைய கருத்து என்னவென்பதைத் தெளிவாக நான் சொல்லிவிட விரும்புகிறேன். அரசியற்கொலை, அரசியற் கொள்ளை என் பவையெல்லாம் இந்தியாவில் உள்ளவை அல்ல; அவை இங்கே வேரூன்றி நிலைத்து நிற்கவும் முடியாது; வெளிநாட் டிலிருந்து இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்ட சரக் கென்றே அவற்றை நான் கருதுகிறேன். பயங்கரமான இந்த முறைகள் நியாயமானவைதான் என்று நீங்கள் எண்ணி விடப் போகிறீர்கள்! மாணவர்களாகிய நீங்கள் இதுபற்றி மிகவும் கவனமாக இருக்கவேண்டும் என்று உங்களை நான் எச்சரிக்கவிரும்புகிறேன். சத்தியாக்கிரகி என்ற முறையில், பலாத்காரத்துக்குப் பதிலாக வேருெரு சரியான மார்க் கத்தை நான் உங்களுக்குக்காட்டுகிறேன். நீங்கள் எதிரிகளை வெருட்டுவதற்குப் பதிலாக உங்கள் உள்ளத்தையே வெருட் டுங்கள். கொடுங்கோன்மையைக் கண்டால், தாராளமாக அதை எல்லா வழிகளிலும் எதிர்த்து நில்லுங்கள். உங்கள் சுதந்திரத்தில் யாராவது தலையிட்டால், அவ்விதம் தலையிடு

வதைத் தடைசெய்யுங்கள். அதற்காக, கொடுங்கோல் செலுத்துபவர்களைச் சிரச்சேதம் செய்யவேண்டிய அவசியமில்லையென்றுதான் சொல்லுகிறேன். அவ்விதம் ரத்தத்தைச் சிந்தும்படி நமது சமயம் போதிக்கவில்லை. அஹிம்சையே நமது சமயத்தின் அடிப்படை. அஹிம்சையைச் செயலில் காட்டும்போது, அது அன்பாக மாறுகிறது. அன்பே அஹிம்சையின் உருவம். அந்த அன்பாகிய அஹிம்சாநெறி எது ? உங்களைச் சுற்றி வாழ்பவர்களிடமும், உங்கள் நண்பர்களிடமும் மட்டும் அன்புகாட்டுவதன்று ; உங்களுடைய எதிரிகளிடமும் நீங்கள் அன்பு செலுத்த வேண்டும். இதுவே உண்மையான அஹிம்சா நெறியாகும்.

இன்னொரு வார்த்தை. உண்மையையும் அஹிம்சையையும் நாம் கடைப்பிடிக்க வேண்டுமென்றால், அச்சத்தை அறவே விட்டுவிடவேண்டும். ஒரு காரியத்தை அரசாங்கத்தார் செய்கிறார்களென்று வைத்துக்கொள்வோம். அது தவறு என்று நமக்குத் தோன்றுகிறது. அந்தத் தவறை அரசாங்கத்தாருக்கு எடுத்துக்காட்ட வேண்டுவது நமது கடமையென்று நினைத்தால், அதைக் கட்டாயம் எடுத்துக் காட்ட வேண்டுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். அவ்விதம் சொல்லுவது ராஜத்துவேஷம் என்று அரசாங்கத்தார் சொன்னாலும், அதற்காகப் பின்வாங்கக் கூடாது. அந்த ராஜத்துவேஷத்தைச் செய்தே தீர வேண்டும். ஆனால், அதைச் செய்வது உங்களுடைய பொறுப்பு. அதனால் ஏற்படும் விளைவுகளை நீங்கள் அனுபவிக்கத் தயாராயிருக்கவேண்டும். இந்தக் கஷ்டங்களையெல்லாம் அனுபவித்துக்கொண்டு அஹிம்சா நெறியில் நிற்பீர்களானால், உங்கள் அபிப்பிராயத்தைக் கேட்குமாறு அரசாங்கத்தாரை நீங்கள் வற்புறுத்த முடியும். உங்களுக்கு அப்படி வற்புறுத்த உரிமை உண்டென்பதை நீங்கள் அப்போதுதான் நிரூபித்தவர்களாவீர்கள்.

நான் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் சேர்ந்திருக்க விரும்புபவன். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலுள்ள குடிக ளனைவரும் அனுபவிக்கிற சகல உரிமைகளிலும் எனக்கும் சமபங்கு கேட்கவேண்டும் என்று எண்ணுகிறேன். இது காரணமாகவே பிரிட்டிஷ் அரசாங்கத்தார் பக்கமே சேர்ந் திருக்கிறேன். அந்தச் சமபங்கு வேண்டுமென்றே இன்று வாதாடுகிறேன். நான் அடிமையினத்தைச் சேர்ந்தவனல்ல. அடிமையினத்தைச் சேர்ந்தவனென்று என்னைச் சொல் லிக் கொள்ளவுமில்லை. நமக்குரிய சமபங்கை பிரிட்டிஷ் கவர்னர்களால் நமக்குத் தந்துவிட முடியாது; அதை நாமே கைப்பற்ற வேண்டும். நீங்கள் இதை உணருவது நலம். எனக்கு அந்தச் சமஉரிமை வேண்டும்; அதை நான் பெற வும்முடியும். ஆனல், என் கடமையைச்செய்வதுமூலமாகவே அவ்வுரிமையை நான் பெறவிரும்புகிறேன். நமது சமயத் தைப்பற்றி மாக்ஸ் முல்லர் என்பவர் தெளிவாகச் சொல்லி யிருக்கிறார். ஆனல், நமது சமயத்தை தெரிந்துகொள்வதற்கு மாக்ஸ் முல்லரைத் நாம் தேடிப் போகவேண்டிய அவசிய மில்லை. இந்தியர்களுடைய சமயத்தின் உயிர்நாடி உரிமை என்பதில் இல்லை, கடமை என்பதிலேயே இருக்கிறது, என அவர் விளக்கியிருக்கிறார். நமது கடமையை நாம் சரி வரச்செய்தால், விரும்பியவற்றையெல்லாம் நாம்நிச்சயமாக அடைய முடியுமென்பதில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கு மானல், இப்பொழுதிருந்தே உங்கள் கடமையை நிறைவேற் றுவதிலும், கடமை காட்டுகிற வழியிலேசென்று போரிடுவதி லும் நீங்கள் கண்ணும் கருத்துமாயிருங்கள். அப்போது, நீங் கள் எந்த மனிதருக்கும் பயப்படவேண்டியதில்லை. கடவுள் ஒருவருக்கே பயப்படவேண்டும் என்பதை உணர்வீர்கள். இதுதான் கோகலே செய்த உபதேசம். அவர் என்னு டைய குருநாதர்; உங்களுக்குமே அவர் குரு என்று நான் சொல்வேன். அவர் செய்த உபதேசம் என்ன? இந்திய ஊழியர் சங்கத்தின் அமைப்பிலேயே அந்த உபதேசம்

பொதிந்து கிடக்கிறது. அந்த உபதேசம் சுட்டும் வழியில்த் தான் நான் வாழ்க்கையை நடத்த விரும்புகிறேன். இந்நாட்டின் அரசியல் வாழ்வையும் அரசியல் ஸ்தாபனங்களையும் தூய்மையாக்கி, ஆன்ம நெறியில்ச் செலுத்த வேண்டுமென்பதே அந்த உபதேசமாகும். இதைச் செயலில்க் கொண்டு வருவதில் நாம் காலந்தாழ்த்தல்கூடாது. மாணவர்கள் அரசியலில்த் தொடர்பில்லாதிருக்க முடியாது. சமயம் அவர்களுக்கு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு அரசியலும் முக்கியமாகும். சமயத்திலிருந்து அரசியலைப் பிரித்துவிடமுடியாது. என் கருத்துக்கள் உங்களுக்குப் பிடிக்காதிருக்கலாம். இருந்தாலும், என்னுடைய இதயத்திலே ஆழமாகப் பதிந்திருக்கிற விஷயங்களைத்தானே நான் சொல்ல முடியும்? தென் ஆபிரிக்காவில் நடந்த சத்தியாக்கிரகப் போரில் நமது நாட்டினர் காட்டிய ஆன்மபலத்தை நான் என்னவென்று சொல்வேன்! நவீன நாகரிகத்தை அவர்கள் கண்டவர்களல்ல. ஆயினும், அவர்களிடம் நமது பண்டைக்கால ரிஷிகளிடமிருந்த மனவலிமை இருந்தது. அந்த ரிஷிகள் செய்த தபோ பலம் அவர்களுக்குப் பரம்பரையாகக் கிடைத்திருக்கிறது. ஆங்கில இலக்கியத்தில் அவர்கள் ஒரு எழுத்தும் அறியார்கள்; இக்காலத்திய நவீன நாகரிகத்தைப்பற்றி அவர்கள் கேட்டதுமில்லை; ஆயினும், மனிதத்தன்மைக்குரிய உயர்ந்த பண்புகள் அவர்களிடம் விளங்கின. இந்த விஷயங்களை நான் தென் ஆபிரிக்காவில்ப் பெற்ற சொந்த அனுபவத்திலிருந்தே சொல்லுகிறேன். எழுதப் படிக்கத்தெரியாத நமது நாட்டினர் எவ்வளவு அரிய செயலையும் சாதித்து விடக்கூடும் என்று தென் ஆபிரிக்காவில் காட்டியிருக்கிறார்கள். தென் ஆபிரிக்காவில் அந்த மக்களுக்குச் சாத்தியமான அந்தச் செயல்கள், எழுதப் படிக்கத்தெரிந்த உங்களுக்கும் எனக்கும் இந்தப் புண்ணிய பூமியான பாரதநாட்டில் பதின்மடங்கு சாத்தியமானதுதான் என்பதை நான் சொல்லவும் வேண்டுமா? அவற்றை அனுபவத்தில் சாத்தியமாகச் செய்கிற பாக்கியம் உங்களுக்கும் எனக்கும் கிடைப்பதாக! (கைதட்டு).

# 10

# ஹிந்து சர்வகலாசாலைப் பிரசங்கம்

"பிரிட்டிஷ் இந்தியாவிலாயினும் சரி, சுதேச மன்னர்கள் ஆட்சி புரிகிற சமஸ்தானங்களிலாயினும் சரி, பெரிய நகர் ஒன்றில் பிரமாண்டமானதொரு அரண்மனையைக் கட்டப்போகிறார்கள் என்று கேள்விப்படும்போதெல்லாம் எனக்கு ஆத்திரமுண்டாகி, 'அடடா! விவசாயிகளின் உழைப்பினால் வந்த செல்வம் அல்லவா இது?' என்று எனக்குள்ளேயே எண்ணிக்கொள்வேன்."

*காசி ஹிந்து சர்வகலாசாலைத் திறப்பு விழாவின்போது காந்திஜி செய்த சொற்பொழிவு முழுவதையும் கீழே காணலாம்.*

நண்பர்களே!

இவ்விடத்துக்கு நான் வர அதிக நேரமானதற்காக என்னை மன்னிக்கும்படி உங்களைப் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்தத் தாமதத்திற்குக் காரணம் நான் அல்ல, வேறு மனிதர்களுமல்ல. இதுவே நீங்கள் என்னை உடனே மன்னித்துவிடப் போதுமான தென்று கருதுகிறேன். (சிரிப்பு). உண்மை என்னவென்றால், கண்காட்சிச் சாலையில் வைத்துள்ள ஒரு பிராணியின் நிலைமையில் நான் இருக்கிறேன். என்னை உபசரிப்பவர்கள், அன்பின் மிகுதியினால் எனது வாழ்க்கையில் அவசியமானதொரு அம்சத்தை எப்போதுமே மறந்து விடுகிறதென்று வைத்திருக்கிறார்கள். அவர்கள் வேண்டுமென்றே இப்படிச் செய்யவில்லை. சந்தர்ப்பவசத்தால் இப்படி நேர்ந்துவிடுகிறது. இங்கே வருவதற்குள் எனக்கும் என்னை உபசரிப்பவர்களுக்கும் நான் ஏறிவந்த வண்டிகளுக்கும் தொடர்ச்சியாக எதிர்பாராத பல விபத்துக்கள் நிகழ்ந்தன. அவைகளை எதிர்பார்த்து, முன்கூட்டியே தக்க ஏற்பாடு செய்திருக்கலாம். அது செய்யவில்லை. இதுதான் இந்தக் காலதாமதத்திற்குக் காரணமாகும்.

நண்பர்களே! பெஸன்ட் அம்மையார் இப்போதுதான் பேசி முடித்தார்கள். அவர்களுடைய ஒப்பற்ற பேச்சுத்

திறமை உங்களை மயக்கி இருக்கிறது. அந்த மயக்கத்தில், நமது சர்வகலாசாலை எல்லா அம்சங்களிலும் பூரண நிலை அடைந்து விட்டதென்று தயவு செய்து நம்பி விடாதீர்கள். இந்தச் சர்வகலாசாலைக்குவந்துபடிக்கப்போகிற இளைஞர்களனைவரும் ஏற்கனவே படித்து முடித்து, ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் பிரஜைகளுக்குரிய எல்லாப் பண்பும் பொருந்தியவர்களாக வெளியேறி விட்டார்களென்றும் எண்ணிவிடாதீர்கள். இனித்தான் இளைஞர்கள் இங்கு படிக்க வரவேண்டி யிருக்கிறது; இனித்தான் இந்த சர்வகலாசாலை வளர்ந்தோங்கி உயிர் பெறவேண்டி யிருக்கிறது. இந்த நிலையிலே, இந்தச் சர்வகலாசாலை பூரண வளர்ச்சி பெற்றுவிட்டதாக எண்ணுவது சரியில்லை யல்லவா? மாணவர்களாகிய உங்களை எண்ணியே நான் இன்று பேசவேண்டியவன். ஆன்ம வாழ்க்கைக்கு இந்த நாடு பெயர்பெற்றது. அந்த வாழ்க்கையிலே இந்த நாட்டுக்கு ஈடுவேறெந்த நாடும் இல்லை. அந்த ஆன்ம வாழ்க்கையை வாயினாலேயே உபதேசித்துவிடலாம் என்று நீங்கள் எண்ணினால், அதைவிடத் தவறான எண்ணம் வேறில்லை. என்றைக்காவது ஒரு நாள் இந்தியா தன் ஆன்ம சக்தியிலெழுந்த உண்மையை உலகத்துக்கு உபதேசிக்குமென்றே நான் நம்புகிறேன். அதை வாய்ப் பேச்சினால் மட்டும் தெரிவித்துவிட முடியுமென்று நீங்கள் நினைக்கவேண்டாம். அது முடியாத காரியம். பிரசங்கங்கள் செய்வதனால் ஒரு பிரயோசனமும் இல்லை. பிரசங்கம் செய்தும் கேட்டும் நான் அலுத்துப்போய் விட்டேன். ஆனால், இரண்டு நாட்களாக இங்கு நடந்த பிரசங்கங்களை விதிவிலக்காகச் சொல்லலாம். இந்த விதமான பேச்சுக்கள் அவசியமானவைதான். பேச்சுக் கலையில் நமது திறமையெல்லாம் காட்டியாகிவிட்டது; அதனால்ப் பயனில்லையென்பதையும் நாம்கண்டுவிட்டோம். பேச்சு,காதுக்கும் கண்ணுக்கும்விருந்தளிக்கலாம். ஆனால், அதுமட்டும்போதாது என்று உங்களுக்குத் துணிந்துசொல்கிறேன். பேசுகிற பேச்சு நம்

இதயத்தைத் தொடவேண்டும்; நமது கைகளும் கால்களும் தொழிற்படச் செய்யவேண்டும். அப்போதுதான் அது பேச்சாகும். இந்தியர்கள் எளிமையும் அழகும் பொருந்திய சுபாவமுடையவர்கள். அந்தச் சுபாவத்தை நாம் இழந்துவிடாதிருக்கவேண்டுமென்றால், இதயத்தோடொத்து நமது அவயவங்களும் இயங்க வேண்டும் என இந்த இரண்டு தினங்களாகப் பேசியவர்கள் எடுத்துச் சொல்லி வந்திருக்கிறார்கள். இவை யாவும் நான் சொல்லப்போவதற்குப் பீடிகைதான்.

புனிதமான இந்நகரில் அமைந்துள்ள இப் பெரிய கலாசாலையின் நிழலில் நின்றுகொண்டு என்னுடைய சொந்த நாட்டினரோடு நான் இன்று அன்னியமொழியில் பேசும்படியாக நேர்ந்திருக்கிறது. இந்த இழிவான நிலைமையை எண்ணுந்தோறும் எனக்கு உண்டாகும் அவமானம் கொஞ்ச நஞ்சமல்ல. இங்கே இந்த இரண்டு நாட்களாகத் தொடர்ந்து ஆங்கிலத்தில் பிரசங்கங்கள் நடந்துவருகின்றன. இந்தப் பிரசங்கங்களை எத்தனையோ பேர் விடாமல் கேட்டுவந்திருக்கிறார்கள். அப்படிக் கேட்டவர்களை, கேட்ட விஷயங்களைப்பற்றி பரீட்சை செய்வதாக வைத்துக் கொள்வோம். நான் பரீட்சை செய்பவனாக இருக்கும் பட்சத்தில், இந்தப் பரீட்சையில் பெரும்பாலோர் தவறிவிடுவார்கள் என்பது திண்ணம். ஏன்? இந்தச் சொற்பொழிவுகள் கேட்டவர்களுடைய இதயத்தைத் தொடவில்லை. டிசம்பர் மாதத்தில், பம்பாயில்க் கூடிய மகத்தான காங்கிரஸ்க் கூட்டத்திற்கு நான் போயிருந்தேன். அங்கு கூடியிருந்த கூட்டம் எத்தனையோ மடங்கு பெரிது. ஹிந்துஸ்தானியில்ப் பேசிய பேச்சுக்களே அனைவருடைய உள்ளத்தையும் கவர்ந்தன. இதை நீங்கள் நம்புவீர்களா? இது நடந்தது பம்பாயில்; காசியில் அல்ல! காசியில் இருப்பவர்கள் அனைவருமே ஹிந்தி பேசுவார்கள்; பம்பாயில் அப்படியல்ல. அப்படியிருந்தும், ஹிந்தியில்ப் பேசினால் விஷயத்தை எளிதாகப் புரிந்துகொள்கிறோம். இதற்குக் காரணம், பம்பாயில்

வழங்கும் மொழிகளுக்கும் ஹிந்திக்கும் அதிக வேற்றுமை யில்லாததே. ஆங்கிலமொழி அப்படியல்ல. அது, இந்திய மொழிகளிலிருந்து பெரிதும் வேறுபட்டிருக்கிறது. அதனுல்த்தான், காங்கிரஸ் கூட்டத்தில் ஹிந்தியில்ப் பேசும் போது பொதுமக்கள் அந்தப்பேச்சுக்களை நன்ருகப் புரிந்துகொள்ள முடிகிறது. இங்கே கல்வி பயிலவரும் மாணவர்களுக்கு அவரவர் தாய்மொழி மூலமாகவே கல்வி போதிக்கப்படும் என்று நம்புகிறேன். உயர்ந்த கருத்துக்களை வெளியிடுவதற்கு வேண்டிய சொற்கள் நமது தாய்மொழிகளில் இல்லை யென்று யாரேனும் எண்ணுவார்களானுல், நாம் உயிரோடு இருப்பதைவிட இறந்தொழிவதே மேல் என்று எனக்குப் படுகிறது. மக்களுடைய அறிவின் வளர்ச்சியைத் தானே பிரதிபலிக்கிறது பாஷை? ஆங்கிலபாஷை எக்காலத்திலாவது இந்திய தேசியபாஷையாக முடியுமென்று கனவுகாண்பவர்கள் இங்கு யாரேனும் இருக்கிருர்களா? ('ஒரு நாளுமில்லை' 'ஒரு நாளுமில்லை' என்ற கூச்சல்). எதற்காக இந்த முட்டுக்கட்டை நமக்கு! ஆங்கிலேய இளைஞரோடு நமது இளைஞர்களை ஒத்து நோக்கும்போது, நம்நாட்டு இளைஞர்கள் மிகவும் கீழான நிலையில் இருக்கிருர்கள். ஆங்கிலக் கல்வி பயிலவேண்டியிருப்பதனுல் நமது இளைஞர்களின் நிலை எவ்வளவு மோசமாய் இருக்கிறதென்பதைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். புனுவிலுள்ள சில பேராசிரியர்களுடன் நெருங்கிப் பேசும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. "இந்திய இளைஞர்கள் கல்வியறிவு பெறுவதற்கு ஆங்கில மொழியைக் கருவியாகக் கொண்டிருப்பதனுல், தங்கள் வாழ்க்கையில் விலைமதிக்கமுடியாத ஆறுவருஷ காலத்தை வீணே செலவிடும்படி நேரிடுகிறது" என அந்தப் பேராசிரியர்கள் கூறினுர்கள். இந்தியாவில், பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் எத்தனை ஆயிரம் மாணவர்கள் ஆங்கிலம் பயிலுகிருர்கள்? ஒரு மாணவன் ஆறு வருஷ காலத்தை இழந்துவிடுகிருன் என்ருல், இந்திய மாணவர்கள் எல்லோ

ருமாகச்சேர்ந்து எத்தனை ஆயிரம் வருஷத்தை இழந்துவிடுகிறார்கள்! இந்நாட்டுக்கு எத்தனை ஆயிரம் ஆண்டுகள் வீணாகின்றன? எது சம்பந்தமாகவும் நாமாகத் தொடங்குவதற்கு வேண்டிய ஊக்கம் நம்மிடத்தில் இல்லை. பிறருடைய தூண்டுதலின்றி நாமே ஒரு காரியத்தையும் செய்துகொள்ளத் தெரியாது என்று நம்மீது குறைசொல்லுகிறார்கள். நமது வாழ்நாளில்ச் சிறந்த இளம்பருவத்தை, அன்னியமொழி ஒன்றைப் படித்து, அதிலே நிபுணத்துவம் பெறுவதற்கென்று செலவிட்டபின், நம்மிடத்து ஊக்கம் எப்படி மிஞ்சியிருக்க முடியும்? ஆங்கிலமொழியில் நிபுணத்துவம் அடைகிற விஷயத்திலும் நமக்குத் தோல்விதான். நேற்றும் இன்றும் இங்கே பேசியவர்களில் மிஸ்டர் ஹிக்கின்பாதம் போல, கேட்பவர்கள் மனதில்ப் பதியும்படி பேச யாருக்காவது முடிந்ததா? அவருக்கு முன் பேசியவர்கள், கேட்டோர் இதயத்தைப் பிணிக்க முடியவில்லையென்றால் அது அவர்கள் குற்றமல்ல. அவர்கள் பேசிய பேச்சுக்களில் நல்ல கருத்துக்கள் நிரம்பியிருந்தபோதிலும், அவை நமது இதயத்திலே பதியவில்லை. ஆங்கிலக் கல்விமுறையால் கேடே விளைந்ததென்று கருதலாம். ஆனால், இன்று இந்தியாவில் முன்னணியில் நிற்பவர்களும், தேசத்திற்காகப் பாடுபடுபவர்களும் ஆங்கிலம் படித்த இந்தியர்கள்தானே என்று சிலர் வாதம் செய்கிறார்கள். நாம் பயிலுகிற ஒரே கல்வி ஆங்கிலக் கல்வி; இந்தக் கல்வியைக் கற்றதற்கு நாம் ஏதாவது செய்ய வேண்டாமா? அல்லாத பக்ஷம் எவ்வளவு கேவலமான காரியம். அது? இருக்கட்டும். சென்ற ஐம்பது வருஷ காலமாகத் தாய்மொழிமூலமாகவே நாம் கல்விபயின்றதாக வைத்துக்கொள்வோம். அப்படிப் பயின்றிருந்தால், இன்று என்ன ஏற்பட்டிருக்குமென்று நினைக்கிறீர்கள்? இன்று சுதந்தர இந்தியாவிலே வாழ்ந்து வருவோம்; நம்மிடையே படித்தவர்களாயுள்ளவர்கள் தங்கள் சொந்த நாட்டில் அன்னியர்களைப் போல வாழாமல், நாட்டு மக்களின் இதயத்தில்ப் பதியும்படி

பேசி உறவாடும் தன்மை பெற்றிருப்பார்கள். பரம ஏழைகளிடையிலே இருந்து அவர்கள் தொண்டு புரிந்துவருவார்கள். இந்த ஐம்பது வருஷகாலத்தில் அவர்கள் பெற்றிருக்கும் அனுபவமும் அறிவும் தேசத்துக்குப் பயன்படக்கூடிய ஒரு செல்வமாக இருந்திருக்கும். (கைதட்டு). இன்றைய நிலைமையில், நம்முடைய மனைவியர்கூட நமது அறிவியல் வாழ்க்கையில் பங்குபெற இயலவில்லை. ஜகதீஸ் சந்திரபோஸையும், ஆசிரியர் ரேயையும் பாருங்கள். அவர்கள் எவ்வளவு அரிய ஆராய்ச்சிகளைச் செய்திருக்கிறார்கள்? அவர்களுடைய ஆராய்ச்சிகள் யாவும் ஆங்கிலத்தில்ச் செய்யப்பட்டுள்ளன. பொதுமக்கள் தெரிந்துகொள்ளும் மொழியில் இவை அமைந்திருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அப்படி இல்லாதது அவமானமான காரியம் அல்லவா?

இனி, இதைவிட்டு, வேறொரு விஷயத்தைக் கவனிப்போம்.

சுயஆட்சி வேண்டுமென்று காங்கிரஸ் மகாசபை ஒரு தீர்மானம் செய்திருக்கிறது. அகில இந்திய காங்கிரஸ்க் கமிட்டியாரும், மூஸ்லீம் லீகினரும் தங்கள் கடமையை உணர்ந்து, ஒரு திட்டத்தைச் சொல்வார்கள் என்பதில்ச் சந்தேகமில்லை. வெளிப்படையாகச் சொல்லும் பட்சத்தில் என்னைப் பொறுத்தவரையில், அவர்கள் செய்யப்போகும் காரியங்களில் எனக்குச் சிரத்தையில்லை. அவற்றைவிட, மாணவருலகம் என்ன செய்யப்போகிறது, பொதுமக்கள் என்ன செய்யப்போகிறார்கள் என்பதைத்தெரிந்துகொள்ளுவதிலேதான் எனக்கு ஆவல் அதிகம். பத்திரிகைகளில் எழுதுவதனாலேயே சுயராஜ்யம் வந்துவிடாது. எவ்வளவுதான் நாம் மேடைமேல் நின்று பிரசங்கங்கள் புரிந்தபோதிலும், சுயராஜ்யத்திற்குத் தகுதியுடையவர்களாகிவிடமாட்டோம். சுயஆட்சியைப் பெற நமக்குத் தகுதி ஏற்படவேண்டுமென்றால், அது நாம் நடந்துகொள்ளும் விதத்தை

யும் செய்யும் செயல்களையும் பொறுத்தே இருக்கிறது. (கைதட்டு). நமக்குச் சுயராஜ்யம் கிடைக்கிறதென்றே வைத்துக்கொள்வோம். அப்போது நமது சொந்த அரசியலை எப்படி நடத்துவோம்? இதை யோசிக்கவேண்டும். நான் இன்று சம்பிரதாய முறையில்ப் பேச விரும்பவில்லை. என் உள்ளத்தில் என்னென்ன எண்ணங்கள் எழுகின்றனவோ அவற்றையெல்லாம் ஒளிக்காமல் அப்படியே சொல்ல விரும்புகிறேன். அதாவது, என்னுடைய சிந்தனையில் நீங்களும் பங்குகொள்ளவேண்டுமென்பது என் விருப்பம். இந்த மாதிரி மனம்விட்டுப் பேசும்போது, நான் அளவுமீறிச் செல்வதாகத் தோன்றினல், என்னை மன்னித்துவிடுங்கள். நேற்றுமாலை நான் விசுவநாதர் கோயிலுக்குப் போயிருந்தேன். அதன் பிரகாரங்களின் வழியாகப் போய்க்கொண்டிருந்தபோது, என் மனதில்ச் சில எண்ணங்கள் தோன்றின. யாரேனும் ஒரு அன்னியர், ஆகாயத்திலிருந்து நேரே விசுவநாதர் கோயிலுக்குள் குதித்தார் என்று வைத்துக்கொள்ளுங்கள். ஹிந்துக்களது நிலைமை என்ன என்பதை, இந்தக் கோயிலையும் அதன் நிலைமையையும்கொண்டே ஆராய்ந்தாரானல், ஹிந்துக்கள் மிகக் கேவலமான மக்கள் என்று முடிவு கட்டுவாரல்லவா? இந்தப் பெரிய கோயிலின் இன்றையநிலைமை நமது இயல்புகளைப் பிரதிபலித்துக் காட்டவில்லையா? ஒரு ஹிந்துமதஸ்தனுக்கு இருக்கக்கூடிய ஆத்திரத்தோடேயே நான் இப்போதுபேசுகிறேன். புனிதமான இந்த ஆலயத்தின் பிரகாரங்களை இவ்வளவு அசுத்தமான நிலைமையில் வைத்திருக்கலாமா? கோயிலைச் சுற்றி எப்படியோ வீடுகளைக் கட்டிவிட்டார்கள். சந்துகள் வளைவாகவும் குறுகலாகவும் இருக்கின்றன. விசாலமாகவும் சுத்தமாகவும் உள்ள இடம் என்பதற்கு எடுத்துக்காட்டாக நமது கோயிலைக்கூடச் சொல்ல முடியவில்லை யென்றால் நம்முடைய சுயஆட்சி என்று சொல்லுவதில்ப் பொருளுண்டா? ஆங்கிலேயர், தங்கள் மூட்டைமுடிச்சுக்களை யெல்லாம்

கட்டிச் சுருட்டிக்கொண்டு, கட்டாயத்தின் பேரிலோ, அல்லது தாங்களாகவோ இந்தியாவைவிட்டுப் போனவுடனே, நமது கோயில்களில்ப் புனிதத்தன்மையும் தூய்மையும் அமைதியும் தாமாகவே வந்து குடிபுகுந்துகொள்ளுமா?

சுயராஜ்யம் என்ற எண்ணம் நமக்கு வருவதற்குமுன், அதை அடைவதற்கு நம்மை நாம் தகுதியாக்கிக் கொள்ள வேண்டும்; இது மிகவும் கஷ்டமான வேலைதான். இருந்தாலும் அவசியம் செய்தாகவேண்டிய வேலை என்று காங்கிரஸ் தலைவர் கூறுகிறார். இதை நான் அப்படியே ஒப்புக்கொள்ளுகிறேன். பெரிய நகரங்கள் ஒவ்வொன்றிலும், துரைமார்கள் வசிக்கும் பகுதி என்றும், இதர மக்கள் வசிக்கும் பகுதி என்றும், ஆக இரண்டு பகுதிகள் இருக்கின்றன. பெரும்பாலும் இந்த நகரங்கள் நரகங்களாகவே இருக்கின்றன; அவ்வளவு துர்நாற்றம். நகர வாழ்க்கையில் பொதுவாக நமக்குப் பழக்கமில்லை. நகர வாழ்க்கை நமக்கு அவசியம் வேண்டுமென்று தோன்றினால், கஷ்டமில்லாமல் வாழ்வதாகிய நாட்டுப்புற வாழ்க்கையை நகரத்தில் நாம் அமைத்துக் கொள்ள முடியாது. பம்பாய் நகரத்தில் இந்தியர்கள் வசிக்கும் பகுதியில் வீதியில் நடந்துசெல்லும்போதெல்லாம் மாடியிலிருந்து யாராவது எச்சில் துப்பிவிடுவார்களோ என்ற பயந்தான். இப்படிச் சதா பயந்துகொண்டே நடப்பது எவ்வளவு சங்கடமான காரியம்? நான் ரயிலில் அதிகமாகப் பிரயாணம்செய்கிறவன். மூன்றாம்வகுப்புப் பிரயாணிகள் படுந்துன்பங்களை நான் நேரில்க் கண்டிருக்கிறேன். இந்தத் துன்பங்கள் எல்லாவற்றுக்கும் ரயில்வே அதிகாரிகளே பொறுப்பென்று சொல்லிவிடமுடியாது. எப்படிச் சுத்தமாயிருப்பதென்னும் சாதாரண விஷயமே நமக்குத் தெரிவதில்லை. ரயில் வண்டிகளின் தளத்தில் எங்கு பார்த்தாலும் எச்சிலைத் துப்பிவைக்கிறோம்; அந்த இடங்களில் இரவில் ஜனங்கள் படுத்துக்கொள்வார்களே என்பதை நாம் நினைத்துப் பார்ப்பதில்லை. ரயில் வண்டியை எப்படி வைத்

திருக்க வேண்டுமென்கிற நினைப்பே நமக்கு இருப்ப தில்லை. வண்டிமுழுதும் சொல்ல முடியாத நாற்றமும் எச்சிலும் அசுத்தமும்தான். உயர்ந்த வகுப்புப் பிரயாணி கள் என்று சொல்லிக்கொள்கிறார்களே, அவர்களும் பல சமயங்களில் இப்படித்தான் நடந்துகொள்கிறார்கள். இந்த மேல்வகுப்புப் பிரயாணிகளிலே, மாணவர்களையும் பார்த் திருக்கிறேன். அவர்களின் நடத்தையும் இப்படித்தான். அவர்களுக்கு ஆங்கிலம் பேசவரும்; நார்போக் சட்டை அணியத்தெரியும்; ஆகவே, மற்றவர்களைப் பிடித்துத் தள் ளிக்கொண்டு உள்ளே நுழைந்து, தங்களுக்கு இடம்விடும் படி மற்றவர்களை அதிகாரம் செய்வார்கள். இப்படிப்பட்ட விஷயங்களை எல்லாம் நான் கூர்ந்து கவனித்திருக்கிறேன். உங்கள் இதயத்துடன் நேரே பேச எனக்கு நீங்கள் அனுமதியளித்தபடியால், எனது இதயத்தை உங்கள்முன் அப்படியே திறந்துகாட்டுகிறேன். சுயராஜ்யமென்ற லட்சி யத்தைநோக்கி முன்னேறும்போது, இப்படிப்பட்ட ஒழுங் கீனத்தை யெல்லாம் சரிப்படுத்திக்கொண்டு போவது அவசியமல்லவா? இனி, வேறொரு காட்சியை உங்களுக்குக் காட்டுகிறேன். நேற்றையக் கூட்டத்திற்கு தலைமைவகித்த மேன்மைதங்கிய மகாராஜா அவர்கள், இந்திய மக்களின் வறுமையைப்பற்றிப் பேசினார்கள். மற்றும் பலரும் அதே விஷயத்தை அழுத்தமாக எடுத்துச் சொன்னார்கள். ஆனால், இந்தப்பெரிய பந்தலிலே அஸ்திவாரக்கல்நாட்டும்விழாவை வைஸ்ராய் நடத்தியபோது, நாம் என்ன கண்டோம்? உண் மையிலேயே, அலங்காரமானதொரு காட்சியைக் கண் டோம்; ஆபரணங்களைக் கொலுவைத்ததுபோன்றதொரு காட்சி. பாரிஸ் நகரிலுள்ள சிறந்த நகை வியாபாரி யொரு வர் இங்கு வந்திருந்தால், அவருடைய கண்களுக்கு இந்தக் காட்சி பெரிய விருந்தாக அமைந்திருக்கும். எனக்கோ, விலையுயர்ந்த ஆபரணங்களை ஏராளமாக அணிந்து வந்த பிரபுக்களையும் சுதேச மன்னர்களையும் பார்த்தபோது,

வறுமைப் பிணியால் பீடிக்கப்பட்டுள்ள கோடிக் கணக்கான எளிய மக்களைப் பற்றிய நினைப்புத்தான் வருகிறது. 'இந்த ஆபரணங்களை யெல்லாம் கழற்றி வைத்து, அவற்றை இந்திய மக்களின் பொதுச் சொத்தாகப் பாவித்து, அச் சொத்துக்கு நீங்கள் தர்மகர்த்தா என்ற முறையில் நடந்துகொள்ளாத வரையில், இந்தியாவுக்கு விமோசனம் கிடையாது' என்று அந்த மன்னர்களைப் பார்த்துச் சொல்லவேண்டு மென்ற ஆத்திரம் எனக்குப் பொங்குகிறது. ('கேளுங்கள்', 'கேளுங்கள்' என்ற பல குரல்கள் ; கைதட்டு). நமது சக்கரவர்த்தியிடம் நமக்குள்ள ராஜவிசுவாசத்தைத் தெரிவித்துக் கொள்வதென்றால், நகைப் பெட்டிகளை எல்லாம் காலிசெய்து, உச்சிமுதல் உள்ளங்கால் வரைப் பூட்டிக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. அப்படி அலங்கரித்துக் கொள்வது அவசியந்தான் என்று நமது சக்கரவர்த்தியோ, வைஸ்ராயான ஹார்டிஞ்சு பிரபுவோ விரும்பவில்லை யென்று நான் நிச்சயமாய்ச் சொல்வேன். ஜார்ஜ் சக்கரவர்த்தி இந்த மாதிரி எதையும் எதிர்பார்க்கவில்லை என்பதாக அவரிடமிருந்தே வேண்டுமானாலும் ஒரு செய்தியைக் கொண்டுவரும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன்; இதனால் எனக்கு எவ்வளவு கஷ்ட நஷ்டங்கள் வந்தாலும் பாதகமில்லை. பிரிட்டிஷ் இந்தியாவிலாயினும் சரி, சுதேச மன்னர்கள் ஆட்சி புரிகிற சமஸ்தானங்களிலாயினும் சரி, பெரிய நகர் ஒன்றில் பிரமாண்டமானதோர் அரண்மனையைக் கட்டப் போகிறார்கள் என்று கேள்விப்படும்போதெல்லாம், எனக்கு ஆத்திர முண்டாகி, 'அடடா! விவசாயிகளின் உழைப்பினால் வந்த செல்வமல்லவா இது?' என்று எனக்குள்ளேயே எண்ணிக்கொள்வேன். இந்திய ஜனத்தொகையில் முக்கால் பங்குக்கு அதிகமான மக்கள் பயிர்த்தொழில் செய்பவர்கள். இவர்கள் ஒரு கதிர் விளையக்கூடிய இடத்தில் இரண்டு கதிர்களை விளையச் செய்யும் ஆற்றல் படைத்த

வர்கள் என்று ஹிக்கின்பாதம் நேற்றிரவு பேசியபோது அழகாகச் சொன்னார். இன்றைய நிலைமையைப் பார்த்தால், விவசாயிகளின் உழைப்பினால் வரும் பலன் முழுவதும் அவர்கள் கையைவிட்டுப் போய்விடுகிறது. நாம் எடுத்துக் கொள்கிறோம், அல்லது வேறு சிலர் கொண்டுபோக விட்டு விடுகிறோம். இப்படிச் செய்கிறவரையில், சுயராஜ்ய உணர்ச்சி நம்மிடம் அதிகமாக இருக்கமுடியாது. உழவன் மூலமாகவே நமக்கு விமோசனம் ஏற்படவேண்டும். வக்கீல்களாலும் டாக்டர்களாலும் பணக்கார ஜமீன்தார் களாலும் நமக்குச் சுயராஜ்யம் வரப்போவதில்லை.

சென்ற இரண்டுமூன்று தினங்களாக நமது மனத்தை அலைத்துக்கொண்டிருந்த விஷயத்தைச் சொல்லவேண்டு வது எனது முக்கிய கடமையாகும். கடைசியில்ச் சொல்லு கிறபடியால், அவ்வளவு முக்கியமானதல்ல என்று இதைக் கருதிவிடக்கூடாது. வைஸ்ராய் காசி நகர வீதிகளில் ஊர் வலம் வந்தபோது, ஏதாவது நேர்ந்துவிடுமோ என்று நாமெல்லோரும் மிகவும் கவலைப்பட்டோம். அனேக இடங் களில், போலீசார் உளவுபார்ப்பவர்களை நிறுத்திவைத்தி ருந்தார்கள். இதையறிந்து நாம் திடுக்கிட்டுப் போனோம். 'எதற்காக இந்த அவநம்பிக்கை? ஹார்டிஞ்சு பிரபு இப்படி அஞ்சி அஞ்சி வாழ்வதைவிட, செத்தேபோவது மேலாகத் தோன்றவில்லையா?' என்ற கேள்வி நம் மனதில் எழுந்தது. ஆனால், மகத்தான பலம்பொருந்திய ஒரு சக்கரவர்த்தியின் பிரதிநிதி இப்படி உயிர்விட இயலுமா? சாவுக்கு அஞ்சி அஞ்சியாயினும், எப்படியாவது உயிர்வாழ்வது அவசியம் என்று அவர் நினைக்கலாம். அதற்காக, இந்த உளவு காரரையெல்லாம் நம்மீது ஏவி விடும்படியான அவசியம் அப்படி என்ன ஏற்பட்டுவிட்டது என்று நமக்குக் கோபம் உண்டாகிறது. நமக்கு இது அவமானமென்று எண்ணி நம துள்ளம் கொதிக்கலாம்; நாம் முணுமுணுக்கலாம்; ஆத் திரப்படலாம். ஆனால், இன்று இந்த ஆத்திரம் காரணமாக

வும், உள்ளக்கொதிப்புக் காரணமாகவும், அராஜகத்தை ஆதரிக்கும் பெருங்கூட்டமொன்று இந்தியாவில் ஏற்பட்டு விட்டதென்பதை நாம் மறந்துவிடலாகாது. நானும் அராஜகத்தை ஆதரிப்பவன்தான்; ஆனால், இந்த வகையிலல்ல, வேறுவகையில். மேலும், வேறொரு வகையான அராஜகத்தை ஆதரிக்கும் கூட்டத்தார் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்களை நான் அணுகநேரிட்டால், அவர்களின் அராஜகத்திற்கு இந்தியாவில் இடமில்லை என்று சொல்லிவிடுவேன். நம்மைக் கீழ்ப்படுத்திய பகைவனை வெற்றிகொள்வது இந்தியாவின் லட்சியமானால், இந்த வகையான அராஜகத்தை வளர்க்கலாகாது. இந்த அராஜகம் பயத்தின் அறிகுறியாகும். கடவுளிடத்தில் நம்பிக்கைவைத்து, கடவுளுக்கு மட்டும் அஞ்சி நடப்போமானால், எவருக்கும் நாம் அஞ்சவேண்டுவதில்லை; உளவுகாரர் மட்டுமல்ல, மகாராஜாக்களாயினும் சரி, வைஸ்ராய்களாயினும் சரி, அல்லது ஜார்ஜ் மன்னரேயாயினும் சரி, அவர்களுக்கு நாம் அஞ்சவேண்டுவதே இல்லை. நாட்டின்மேல் வைத்திருக்கும் அன்புகாரணமாகவே, இந்தக் கூட்டத்தார் அராஜகத்தை ஆதரிக்கிறார்கள். இவர்கள் அன்பை நான் போற்றுகிறேன். நாட்டின் நலனுக்காக அவர்கள் உயிரையும் விடச் சித்தமாயிருப்பதனால் அவர்களை நான் கௌரவிக்கிறேன். ஆனால், கொலைசெய்வதை போற்றுதற்குரிய செயலென்று நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். இவர்கள் கொலை செய்யத் துணிவது, கௌரவமாக உயிர் துறக்கத் தாங்கள் சித்தமாயிருக்கிறார்கள் என்பதைக் காட்டுமா? இத்தகைய பலாத்கார முறைகளுக்கு எந்தச் சாஸ்திரத்திலும் ஆதாரமில்லை. ஆங்கிலேயர் இந்தியாவை விட்டு வெளியேறினால்தான், இந்த நாட்டுக்கு விமோசனமுண்டு என்று தோன்றினால், அவ்விதம் சொல்வதற்கு நான் சிறிதும் தயங்கமாட்டேன். அந்த நம்பிக்கைக்காக நான் உயிர்விடவும் தயாராயிருப்பேன். அப்படி உயிர்விடுவதே கௌர

வமான தென்று கருதுகிறேன். வெடிகுண்டெறிபவனு டைய நிலைமையோ அப்படி இல்லை. ரகசியமாகச் சூழ்ச்சி செய்கிறபடியால், அவன் வெளிவர அஞ்சுகிருன். பிடிபட்டு விட்டால், நியாயத்தவருன வழியில்ச் சென்றதற்காகத் தண்டனை அடைகிருன். 'வங்காளப் பிரிவினைக் கிளர்ச்சியில் நாம் வெற்றியடைந்திருக்கிறேமல்லவா? பலாத்காரத்தில் இறங்காவிட்டால், சிலர் வெடிகுண்டெறிந்திரா விட்டால், வெற்றி கிடைத்திராது' என்று சிலர் சொல்லுகிருர்கள். ('பெஸண்டு அம்மையார்: தயவுசெய்து இதை நிறுத்திக் கொள்ளுங்கள்'). வங்காளத்தில் திரு. லையன் தலைமையில் நடந்த கூட்டத்திலும் நான் இதையே சொன்னேன். நான் சொல்லிவருவது அவசியமென்றே கருதுகிறேன். இதை நிறுத்திவிட வேண்டுமென்றுல் அப்படியே செய்துவிடுகி றேன். (தலைவரைப் பார்த்து) தங்கள் உத்தரவு எதுவோ அதன்படி நடக்கக் காத்திருக்கிறேன். இப்போது பேசுகிற விதமாக நான் பேசுவதனல் இந்நாட்டிற்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கும் நன்மை ஒன்றும் ஏற்படாதென்று நீங்கள் கருதினுல் என் பேச்சை நிச்சயமாக நிறுத்திக் கொள்கிறேன். ('மேலே பேசுங்கள், மேலே பேசுங்கள் என்ற கூச்சல்'). ('தலைவர்: தயவுசெய்து தங்கள் நோக் கத்தை விளக்கமாகச் சொல்லுங்கள்'). எனது நோக் கத்தை விளக்கிச் சொல்லிக்கொண்டு தானிருக்கிறேன். நான் மட்டும்........('மறுமுறையும் பெஸண்டு அம்மையார் தடைசெய்கிருர்'). அன்பர்களே, பேச்சினிடையே இப்ப டித் தலையிடுவதற்காகக் கோபிக்காதீர்கள். பெஸண்டு அம்மையார் இப்போது நான் பேசுவதை நிறுத்தும்படி சொல்கிருரென்றுல், இந்தியாவின்மேல் அவர் கொண்டுள்ள பற்றினுலேயே அவர் அப்படிச் சொல்கிருர். இளைஞர்களா கிய உங்கள்முன், நான் இவ்வளவுதூரம் வாய்விட்டுப் பேசு வது சரியல்லவென்று அவர் நினைக்கிருர்போலும். அப் படியே வைத்துக்கொண்டாலும், விபரீதமாக நான் ஒன்

றையும் சொல்லிவிடவில்லையே! இந்திய அரசாங்கத்தாரும் இந்தியப் பொதுமக்களும் ஒருவர்மேல் ஒருவர் கொண்டுள்ள அவநம்பிக்கையை நீக்கிவிட வேண்டுமென்றுதான் சொல்லுகிறேன். நமது லட்சியத்தை அடைவதற்கு, பரஸ்பர அன்பையும் பரஸ்பர நம்பிக்கையையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு அரசுவேண்டும். பொறுப்பில்லாமல் வீட்டில் நாம் பேசிக்கொண்டிருப்பதைவிட, இந்தக் கல்லூரியின் ஆதரவில் பேசுவது சிறந்ததல்லவா? இவ்விஷயங்களை வெளிப்படையாகப் பேசுவதே உத்தமம் என்று நினைக்கிறேன். இதற்குமுன் இவ்வாறு நான் பல இடங்களில் பேசி இருக்கிறேன்; அதனால் நல்ல பலனும் ஏற்பட்டிருக்கிறது. மாணவர்கள் ஆராய்ந்து அலசாத விஷயமே இல்லையென்பது எனக்குத் தெரியும்; அவர்களுக்குத் தெரியாத விஷயமும் இல்லை. அதன் காரணமாகவே, நான் நம்மிடத்தில் காணப்படும் குறைகளையெல்லாம் எடுத்துச் சொல்லிக்கொண்டு வருகிறேன். எனது நாட்டின் புகழ் எனக்கு உயிர்போன்றது. அந்தப் புகழுக்கு மாசு ஏற்பட்டுவிடக் கூடாது என்ற கவலையினால்த்தான் இந்த எண்ணங்களையெல்லாம் உங்களிடம் வெளியிட்டுச் சொல்லுகிறேன். இந்தியாவிலே அராஜகம் இருக்கவேண்டிய அவசியமேயில்லை என்று உங்கள்முன் சொல்லிக்கொள்கிறேன். மனதிலுள்ளவற்றை வெளிப்படையாகவும் ஒளிக்காமலும் அரசாங்கத்தாருக்கு எடுத்துச்சொல்வோம். நாம் சொல்வது அவர்களுக்குப் பிடிக்கவில்லையென்றால், அதன் பலனை அனுபவிக்கத் தயாராயிருப்போம். இதற்காகத் தவறானசொல்லும் செயலும் நமக்கு வேண்டாம். இந்தியன் சிவில் சர்விஸ் என்னும் ஊழியர் வர்க்கமானது எவ்வளவோ பழிச்சொல்லுக்கு உள்ளாகியிருக்கிறது. அந்த ஊழியர் வர்க்கத்தைச் சேர்ந்தவர் ஒருவரோடு ஒருநாள் நான் பேச நேர்ந்தது. சிவில் சர்விஸ் உத்தியோகத்தினர் போக்கு வேறு, என்னுடைய போக்கு வேறு. இருந்தாலும், அவர் என்னோடு

பேசிய முறையை நான் போற்றாமல் இருக்க முடியாது. 'காந்தியவர்களே, சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர் களாகிய நாங்கள் எல்லோருமே மிகவும் கொடியவர்கள். மக்களைப் பரிபாலிப்பதற்குப் பதிலாகக் கொடுமைப்படுத்து கிறோம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?' என்று அவர் என்னைக் கேட்டார். 'இல்லை' என்று சொன்னேன். அப்படியானால், சந்தர்ப்பம் வாய்க்கும்போது பெரிதும் அவதூறுக்குள்ளாகி யிருக்கும் எங்கள் உத்தியோக வர்க் கத்தின் சார்பாக நீங்கள் பரிந்து பேசவேண்டும்' என்று கேட்டுக்கொண்டார். அவ்விதம் பரிந்து பேச நான் இங்கு வந்திருக்கிறேன். இந்தியன் சிவில் சர்விஸ் வர்க்கத்தில் வேலை பார்ப்போரில்ப் பலர் மிகவும் அகம்பாவம் பிடித்தவர் கள்; மக்களை மிக்க கொடுமையாக நடத்துபவர்கள்; சில சமயங்களில் கண்மூடித்தனமாகவும் நடந்து கொள்வார் கள். இவ்வளவும் உண்மைதான். இவர்கள் பரிபாலனம் செய்யும் அழகை வருணிப்பதற்கு இன்னும் பல கடுமை யான பதங்களையும் உபயோகிக்கலாம். இவை யாவும் உண்மையென்றே நான் ஒப்புக்கொள்கிறேன். இந்தியா வில்ச் சில வருஷங்கள் வாழ்ந்தபிறகு, இவர்களில்ச் சிலர் கேவலமாக நடந்துகொள்கிறார்கள் என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், இவ்விதம் இவர்கள் கேவலமாய் நடந்துகொள்வது எதைக் காட்டுகிறது? இந்தியாவுக்கு வருமுன், இவர்கள் நல்ல பண்புடையவர்களா யிருந்தார்கள்; இங்கே வந்தபின் அவர்களுடைய தன்மை சிறிது மாறிவிட்டதென்றால், நம்முடன் கலந்து பழகிய தோஷத்தினால் இப்படி நேர்ந்ததாகக் கொள்ளலாமல்லவா? ('இல்லை', 'இல்லை' என்ற கூச்சல்). நீங்களே சற்று நினைத்துப் பாருங்கள். நேற்றுவரை நல்ல வனாக இருந்த ஒருவன், இன்று என்னுடன் பழகிய பின் னர், கெட்டுப்போய் விட்டானென்றால், அவன் கெட்டுப் போனதற்கு அவன் பொறுப்பாளியா அல்லது நானா?

சிவில் சர்விஸ் வர்க்கத்தார் இந்தியாவில் காலெடுத்து வைத்தவுடனே, பொய்யும் முகஸ்துதியும் அவநம்பிக்கையும் அவர்களைச் சூழ்ந்துகொள்கின்றன. அதனால் அவர்களது நல்லதன்மை திரிந்துபோகிறது. அத்தகைய தீய சூழலில் நாம் இருந்தால், நம்முடைய தன்மையுமே கெட்டுவிடும். நம்முடைய குற்றத்தை உணர்ந்து ஒப்புக்கொள்வதே நலம். சுயராஜ்யம் பெறவேண்டுமென்றால், அதை நாமே கைப்பற்றவேண்டுமேயொழிய, வேறெவரும் நமக்கு அதைத் தந்துவிடப்போவதில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சரித்திரத்தையும் பிரிட்டிஷ்மக்களுடைய சரித்திரத்தையும் கவனித்துப் பாருங்கள். பிரிட்டன் சுதந்திரப்பற்றுள்ள நாடு. தாங்களாகவே சுயராஜ்யத்தைக் கைப்பற்றாத மக்களுக்கு, அந்நாடு ஒருநாளும் சுதந்திரம் அளிக்கப்போவதில்லை. தென் ஆபிரிக்காவில் நடந்த போயர் யுத்தத்திலிருந்து நீங்கள் நல்ல படிப்பினைகளைக் கற்றுக்கொள்ளலாம். சில வருஷங்களுக்குமுன்னே எந்த மக்கள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை எதிர்த்துவந்தார்களோ அதே மக்கள் இன்று அந்த சாம்ராஜ்யத்தின் நண்பர்களாயிருக்கிறார்கள்.

(இந்த இடத்தில் யாரோ குறுக்கிட்டதினால், பேச்சில் தடை ஏற்பட்டது. பிரசங்கமேடையை விட்டுப்போக நேரிட்டபடியால், பேச்சு நின்று போயிற்று.)

# புதுமைப் பதிப்பக வெளியீடுகள்

**தேசிகவிநாயகம் பிள்ளை நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | மலரும் மாலையும் (மூன்றாம் பதிப்பு) | 6 0 0 |
| 2. | ஆசியஜோதி (இரண்டாம் பதிப்பு) | 2 0 0 |
| 3. | நாஞ்சில்நாட்டு மருமக்கள் வழி மான்மியம் | 1 0 0 |
| 4. | இளந்தென்றல் | இருப்பில்லை |

**டி. கே. ஸி. நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | கம்பராமாயணம் (பால,அயோ.காண்டம்) | 6 0 0 |
| 2. | ஷை (ஆரண்ய காண்டம்) | 5 0 0 |
| 3. | முத்தொள்ளாயிரம் | 3 0 0 |
| 4. | இதய ஒலி | இருப்பில்லை |
| 5. | கம்பர் யார்? | ” |

**'கல்கி' நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | சாரதையின் தந்திரம் | 2 0 0 |
| 2. | மகுடபதி | இருப்பில்லை |

**காந்திஜி நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | மாணவருக்கு | இருப்பில்லை |
| 2. | பெண்களுக்கு | 6 0 0 |

**ராஜாஜி நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | கதைகள் | 3 0 0 |
| 2. | கட்டுரைகள் | 4 8 0 |
| | தமிழிசைப் பாட்டுக்கள் (சாகித்யங்கள்) | 1 8 0 |

**வெளிவரும் நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | நமது மொழிப் பிரசினை | (காந்தியடிகள்) |
| 2. | பிரிட்டிஷாருக்கு எனது வேண்டுகோள் | ” |
| 3. | ஹிந்து முஸ்லீம்களுக்கு | ” |
| 4. | இந்திய சமஸ்தானங்களுக்கு | ” |
| 5. | சீனமக்களும்-சீனமும் | (லின்-யூ-டாங்) |

Navalar Power Press, Karaikudi.